

ஸினிமாத் தொழிலில்
இதற்கு முன்பு சாதித்ததை விட
அரிய சாதனைகளை
அமோகமாக விளக்கும்...

ஜுபிடரின்

# வேலைக்காரி

பல சாகசச் செயல்களும்
தெவிட்டாத ஹாஸ்யமும்
வியப்பு மிகுந்த கதையும்
கொண்ட அருமையான
சமூகச் சித்திரம்



டைரக்ஷன்
ஏ. எஸ். ஏ. சாமி
ஸ்டுடியோ
சென்ட்ரல்



ரூ. 22-8-0 பெறுமானமுள்ள ஒரு கைக் கெடியாரமும் ஒரு பவுண்டன் பேனவும் இனாம்

## உயர்தர கைக் கெடியாரங்கள்

எல்லா கெடியாரங்களும் உயர்ந்த ரகம். ஸ்விஸ் தயாரிப்பு. உறுதியுள்ள லிவர் மெக்கானிஸம். நீடித்து உழைப்பதுடன் சரியாக மணி காட்டும். ஐந்து வருஷங்களுக்கு உத்திரவாதம். படத்தில் காட்டியிருப்பதைவிட மிகவும் அழகானவை. ஒவ்வொன்றும் ப்ளாஸ்டிக் பட்டையுடன், வெல்வெட் பெட்டியில் அமைக்கப்பட்டுள்ளது.



நெ. 201 வட்ட வடிவம்



நெ. 202 தட்டை வடிவம்

| | | | |
|---|---|---|---|
| வட்டவடிவம். க்ரோமியம் | 17/8/- | உயர்ந்த ரகம் | 18/8 |
| 8 ஜுவெல்கள் | 20/8/- | 5 ஜுவெல்கள் உ. ர. | 22/8/- |
| 7 ,, | 26/- | ரோல்ட்கோல்டு | 38/- |
| 15 ,, | 35/- | ,, ,, | 58/- |

| | | | |
|---|---|---|---|
| 5 ஜுவெல்கள் | 28/- | உயர்ந்த ரகம் | 30/- |
| 5 ,, | | ரோல்ட்கோல்டு 10 வருஷ உத்திரவாதம் | 38/- |
| 7 ,, | 35/- | ரோல்ட்கோல்டு | 40/- |
| 15 ,, | 50/- | ,, ,, | 58/- |



நெ. 203 வளைந்த வடிவம்



நெ. 204 [illegible] வடிவம்

| | | | |
|---|---|---|---|
| 5 ஜுவெல்கள் க்ரோமியம் | 30/- | உயர்ந்த ரகம் | 32/- |
| 5 ,, | | ரோல்ட்கோல்டு 10 வருஷ உத்திரவாதம் | 40/- |
| 7 ,, க்ரோமியம் | 40/- | ரோல்ட்கோல்டு | 45/- |
| 15 ,, ,, | 52/- | ,, ,, | 60/- |

| | | | |
|---|---|---|---|
| 5 ஜுவெல்கள் க்ரோமியம் | 34/- | உயர்ந்த ரகம் | 37/- |
| 5 ,, | | ரோல்ட்கோல்டு 10 வருஷ உத்திரவாதம் | 42/- |
| 7 ,, க்ரோமியம் | 42/- | ரோல்ட்கோல்டு | 48/- |
| 15 ,, ,, | 54/- | ,, ,, | 62/- |

தபால் செலவு அணா 12 பிரத்தியேகம். ஒவ்வொரு கைக் கெடியார ஆர்டருக்கும் ஒரு அமெரிக்கன் பேனா இனாமாக அளிக்கப்படும். சேர்ந்தாற்போல் மூன்று கைக் கெடியாரங்களுக்கு ஆர்டர் செய்தால் ரூ. 22-8-0 பெறுமானமுள்ள ஒரு கைக் கெடியாரம் இனாமாக அளிக்கப்படும். அல்லது விலையில் பன்னிரண்டரை சத விகிதம் தள்ளுபடி செய்யப்படும்.

**STANDARD WATCH CO. (K) Post Box No 11419 - CALCUTTA - 6**

---

## அமெரிக்கன் மாடல் ரிவால்வர்

### லைசென்ஸ் வேண்டியதில்லை




உங்கள் உயிரையும், சொத்தையும், மானத்தையும், துஷ்டர்கள், விலங்குகளின் தாக்குதல்களிலிருந்து பாதுகாத்துக் கொள்ளுங்கள்.

வீட்டிலும், பிரயாணம் செய்கையிலும் இந்த அழகிய உறுதியான ரிவால்வர் உங்களுக்குச் சிறந்த, நம்பகமான நண்பனாக விளங்கும். ஒன்றன்பின் ஒன்றாக தானே 6 தரம் சுடுவதற்கு 6 ரவைகள் பொருந்திய இது, அசல் அமெரிக்கன் பிஸ்டல்களுக்குச் சமமானது. 15 அவுன்ஸ் கனமும், 9 அங்குல நீளமும் உள்ள இது நெருப்பைக் கக்கிக் கொண்டு பயங்கர சப்தத்துடன் வெடிக்கிறது. இன்றே இதில் ஒன்றுக்கு ஆர்டர் கொடுங்கள். குறைந்த விலையுள்ள இந்த மெய்க்காப்பாளன் இன்றி ஒரு நாளும் இருக்காதீர்கள்.

| | | | |
|---|---|---|---|
| ரகம் நெ. | 222 | ரூ. | 6/8 |
| ,, | 333 | ரூ. | 7/8 |
| ,, | 444 | ரூ. | 8/8 |

மேல்கொண்டு 4 டஜன் ரவைகள் விலை ரூ. 4/8. பிஸ்டல் உறை கொண்ட தோல் பெல்ட் ஒன்றின் விலை ரூ. 5/- லூப்ரிகேடிங் ஆயில் ஒரு பாட்டில் விலை ரூ. 1/- மேற்கண்ட விலாசத்திற்கு எழுதுங்கள்.

**WILSON TRADING CORPORATION**

P. B. 247, CAWNPORE (U. P.)





"இதுவே புதிய லக்ஸ் டாய்லட் சோப்!"
LUX
TOILET SOAP
"மனோரஞ்சிதமான புதிய பரிமளம்!"
"புதிய ரோஜாநிற காகிதத்தில் சுற்றப்பட்டது!"
LTS. 194-172 TM.
★ சினிமா நட்சத்திரங்களின் அழகுதரும் சோப் ★

பக்ஷிராஜாவின்

# வளக்கொடி

வருகிறது!



**மஹாலிங்கம்...ராஜகுமாரி...வரதன்....**

**சரோஜினி...கிருஷ்ணன்...மதுரம்** நடித்தது

டைரக்ஷன்: **ஸ்ரீராமுலு நாயுடு**

**நாராயணன் கம்பெனி** வெளியீடு



# கல்கி
## பொருளடக்கம்

மலர் 8 இதழ் 34 | மார்ச் 20 | சர்வதாரி பங்குனி 7உ



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்களும், சம்பவங்களும் கற்பனையே.

எச்.எம்.வி.

# ஹிந்துஸ்தானத்தின் இன்னிசைக் குயில்!



**N.14422**
(மீரா பஜனை)
ஹரி தும் ஹரோ
ப்யாரே தரிசன

**N.28557**
ப்ரோசே வாரு
2 பாகங்கள்-(கமாஸ்)



**N.28050** (பாரதியாரின் மும்மணிகள்)
யாமறிந்த மொழிகளிலே
செந்தமிழ் நாடு
வாழிய செந்தமிழ்



ஸ்ரீமதி: எம்.எஸ்.சுப்புலக்ஷ்மி.



"ஹிஸ் மாஸ்டர்ஸ் வாய்ஸ்"

தி கிராமபோன் கம்பெனி, லிமிடெட்
கல்கத்தா - பம்பாய் - மதராஸ் - டில்லி



மலர் 8 | தமிழ்த் திருநாடு தன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா —பாரதியார் | இதழ் 34

## என்ன செய்தி?

### பாரதியார் தந்த செல்வம்

மகாகவி பாரதியாரின் பாடல்களும் அந்தப் பாடல்களைப் பாடும் உரிமையும் மகாகவி அளித்துள்ள மற்ற இலக்கியச் செல்வங்களும் தமிழ் நாட்டின் பொதுச் சொத்தாக இருக்க வேண்டும் என்று பலரும் சொல்லி வந்திருக்கிறார்கள். தமிழ் மக்களின் இந்த விருப்பத்தை நிறைவேற்றி வைக்கப் பல முயற்சிகள் தொடங்கப்பட்டுப் பலன் தராமல் போயின. கடைசியாக, நம் பிரதம மந்திரி கனம் ஓமந்தூர் ராமசாமி ரெட்டியார் பிரயத்தனப்பட்டு அந்தக் காரியத்தை வெற்றிகரமாக நடத்திக் கொடுத்தது பற்றி அளவில்லாத மகிழ்ச்சியடைகிறோம். கனம் பிரதம மந்திரியின் கோரிக்கைக்கு இணங்கி, ஸ்ரீ ஏ. வி. மெய்யப்பச் செட்டியார் அவர்கள், பாரதியார் பாடல்களை ஒலிப்பதிவு செய்தல், ஒலி பரப்புதல் ஆகிய உரிமைகளைச் சென்னை சர்க்காருக்குத் தான சாஸனம் செய்து கொடுக்க முன் வந்திருக்கிறார். ஸ்ரீ ஏ. வி. மெய்யப்பச் செட்டியார் மேற்படி உரிமைகளைப் பெருந் தொகை கொடுத்து வாங்கியிருந்தார் என்பது நேயர்கள் அறிந்ததே. பாரதியாரின் சகோதரரும் பாரதி பிரசுராலயத்தின் இப்போதைய சொந்தக்காரருமான ஸ்ரீ சி. விசுவநாதய்யர் அவர்கள் பாரதியார் நூல்களைப் பதிப்பிக்கும் உரிமையைச் சென்னை சர்க்காருக்குப் பதினைந்தாயிரம் ரூபாய்க்கு விற்றுவிட முன்வந்திருக்கிறார். சில காலத்துக்கு முன்பு வரையில் தமிழ் நாட்டில் புத்தகப் பிரசுரத் தொழில் எவ்வளவு லாபமற்ற தொழிலாயிருந்தது என்பதை அறிந்தவர்கள், அந்தக் காலத்தில் பாரதியார் நூல்களைப் பதிப்பித்து உதவிய பாரதி பிரசுராலயத்துக்கு மிக்க நன்றி செலுத்துவார்கள். இப்போதுள்ள நிலைமையில் அவர்கள் பதினையாயிரம் ரூபாய்க்குச் சகல உரிமைகளையும் தருவதற்கு முன் வந்ததையும் வெகுவாகப் பாராட்டுவார்கள். ஸ்ரீ ஏ. வி. மெய்யப்பச் செட்டியாருக்கும் ஸ்ரீ சி. விசுவநாதய்யருக்கும் இவர்களை அழைத்துப் பேசிக் காரியத்தை முடித்த பிரதம மந்திரி ரெட்டியார் அவர்களுக்கும் நமது மனமார்ந்த வாழ்த்துக்களைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

### புதுடில்லி பள்ளிக்கூடம்

குரு ஒருவர், சிஷ்யனும் ஒருவன்,— என்ற நிலையில் 1924-ம் வருஷம் ஜனவரி மாதம் புதுடில்லியில் மதராஸி பள்ளிக்கூடம் ஆரம்பமாயிற்று. அந்த வருஷக் கடைசியில் ஆறு ஆண் குழந்தைகளும் ஆறு பெண் குழந்தைகளும் பள்ளிக்கூடத்தில் படித்தனர். நாளடைவில் பள்ளிக்கூடம் வளர்ச்சி பெற்று இவ்வருஷத்தில் 855 சிறுவர் சிறுமிகள் கல்வி பெற்று வருகின்றனர். நீண்டகாலம் புதுடில்லி முனிசிபாலிடியின் தயவில் இடவசதி பெற்றுப் பள்ளிக்கூடம் நடந்து வந்தது. சொந்தக் கட்டிடம் இல்லாமல் முடியாது என்ற நிலைமை ஏற்பட்ட பிறகு அதற்கான முயற்சி தொடங்கப்பட்டது. 1947-ம் வருஷம் டிசம்பர் மாதம் 8-ந் தேதி புதுடில்லியில் அரசியல் நிர்ணய சபை ஆரம்பமான தினத்தில் பள்ளிக்கூடக் கட்டிடம் ராஜாஜி அவர்களினால் திறந்து வைக்கப்பட்டது. ஆனால் கட்டிடம் கட்ட ஆரம்பித்துப் பூர்த்தி பெற்ற காலத்துக்குள்ளே அந்தக் கட்டிடமும் போதவில்லை யென்று சொல்லும்படி மாணவர் தொகை பெருகி யிருக்கிறது. இப்படி யெல்லாம் இடநெருக்கடி ஏற்பட்டிருப்பது ஒருவிதத்தில் தென்னிந்தியர்களுக்குப் பெருமை தரும் விஷயமேயாகும். புதுடில்லியிலுள்ள மத்திய சர்க்கார் காரியாலயங்களில் உத்தியோகம் பார்க்கும் நம்மவர்களின் தொகை வளர்ந்து வருவதற்கும் அவர்களுடைய குடும்பங்கள் பல்கிப் பெருகி வருவதற்கும் மேற்படி பள்ளிக்கூட இடநெருக்கடி அறிகுறியல்லவா?

ஆனால் வெறுமனே பெருமைப் பட்டுக் கொண்டிருப்பதினால் மட்டும் பயன் ஒன்றும் விளைந்து விடாது. பள்ளிக்கூடத்தின் வளர்ச்சிக்குத் தக்கபடி இடவசதியும் அதிகமாக வேண்டும். இடவசதி அதிகமாவதற்கு முக்கியமாக வேண்டியது பணம். வட இந்தியாவிலும் தென்னிந்தி

யாவிலும் நம்மவர்களுடைய பள்ளிக் கூடங்களுக்கு உதவியாகப் பல கச்சேரிகள் நடத்தித் தந்திருக்கும் ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மி அவர்களின் சேவையைப் புதுடில்லியிலுள்ள மதராஸிகளும் பயன் படுத்திக் கொள்ள விரும்பி, நாளது மார்ச்சு 27-ந் தேதி உதவிக் கச்சேரி ஏற்படுத்தியிருக்கிறார்கள்.

புதுடில்லியில் வசிக்கும் மதராஸிகளின் சமூக வாழ்க்கையில் நாம் மகிழ்ச்சியடைய வேண்டிய ஒரு சிறந்த அம்சத்தைக் காண லாம். சென்னை மாகாணத்தில் நாம் தமிழர்கள் என்றும் ஆந்திரர்கள் என்றும் மலையாளிகள் என்றும் கன்னடியர்கள் என்றும் பிரித்துப் பேசிக் கொள்கிறோம். தனி மாகாணங்களுக்காகச் சண்டை போடுகிறோம். பாஷாவாரிப் பிரிவினைகளைத் தவிர சாதிப் பிரிவினைகள், மதப் பிரிவினைகள் வேறு இருக்கின்றன. சாதிப் பிரிவினையை ஒழிக்க வேண்டும் என்று சொல்லிக்கொண்டே சாதிப் பிரிவினையை வளர்த்துக் கொண்டு வரும் விந்தையையும் பார்க்கிறோம். ஆனால் புது டில்லியில் சென்னை மாகாணத்திலிருந்து சென்றிருப்பவர்கள் எல்லாரும் மதராஸிகள்தான். பாஷைப் பிரிவினையும் சாதி சமயப் பிரிவினைகளும் அவர்களிடையே தலை காட்டுவதில்லை. அவர்களுடைய குழந்தைகள் படிக்கும் பள்ளிக்கூடத்துக்கு **மதராஸி பள்ளிக்கூடம்** என்றே பெயர் வைத்திருக்கிறார்கள். மதராஸ் மாகாணத்தைச் சேர்ந்தவர்கள் எல்லாரும் ஒருமுகமான ஒற்றுமை உணர்ச்சியுடன் பள்ளிக் கூடத்தை நடத்துகிறார்கள். சுதேச சமஸ்தானப் பிரச்னைகளைத் தீர்ப்பதில் புகழ் பெற்ற ஸ்ரீ வி. பி. மேனன் புதுடில்லி மதராஸி பள்ளிக்கூடச் சங்கத்தின் தலைவர். தமிழ்நாட்டைச் சேர்ந்த ஸ்ரீ டி. ராமய்யா சங்கத்தின் கௌரவ காரியதரிசி. ஆந்திரர்களும் கன்னடக்காரரும் நிர்வாக சபையில் இருக்கின்றனர். ஆயிரத்தைந் நூறு மைலுக்கு அப்பால் சென்ற இடத்தில் தென்னிந்தியர்கள் இவ்வளவு ஒருமுகப் பட்டு ஒத்துழைப்பது தென்னிந்தியாவுக்கு ஒரு படிப்பினையாகும்.

இந்தியாவின் இணையற்ற அருமைத் தலைவரும் உலகம் புகழும் பிரதம மந்திரியுமான பண்டித ஜவாஹர்லால்ஜியின் தலைமையில் ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மியின் கச்சேரி நடைபெறுகிறது. பள்ளிக் கூட நிதிக்கு உதவிக் கச்சேரி செய்கிறார் என்பது மட்டுமல்லாமல் வட இந்தியாவில் தென்னாட்டுக் கர்நாடக சங்கீதக் கலையின் கொடியை ஸ்ரீமதி எம். எஸ். நிலைநாட்டுகிறார். புதுடில்லியில் வசிக்கும் மதராஸிகள் அனைவரும் மேற்படி கச்சேரி சம்பந்தமாக ஒத்துழைத்து வெற்றிகரமாக நடத்தி வைக்கக் கோருகிறோம்.

## பத்திரிகைப் புல்லுருவிகள்

ஆபாசப் பத்திரிகைகளின் மூலமாகச் சமூகத்துக்கு எவ்வளவு கேடு விளைகிறது என்பதைச் சென்ற ஜனவரி மாதம் 23-ந் தேதி இதழில் "பத்திரிகை தர்மம்" என்ற தலையங்கத்தில் விவரித்திருந்தோம். "பத்திரிகைச் சுதந்திரம் கோரும் பத்திரிகைக்காரர்கள் ஆபாசக் குப்பைப் பத்திரிகைகளைக் கட்டுப்படுத்த வழி கண்டு பிடிக்க வேண்டும்" என்று அகில இந்தியப் பத்திரிகாசிரியர் மகாநாட்டின் தலைவர் ஸ்ரீ தேவதாஸ் காந்தி கூறியதையும் எடுத்துக் காட்டியிருந்தோம். இந்த விஷயம் சம்பந்தமாக நமது விளம்பர மந்திரி கனம் பக்தவத்ஸலம் அவர்கள் சென்னை சர்க்காரின் கொள்கையைத் திறம்பட எடுத்துக் கூறி, ஆபாசப் பத்திரிகைகளைக் கட்டுப்படுத்துவதில் மற்றப் பத்திரிகைகள் — பொது ஜனங்களின் ஒத்துழைப்பைக் கோரியிருந்தார்.

சென்ற வாரத்தில் பம்பாயில் கூடிய அகில இந்தியப் பத்திரிகாசிரியர் மகாநாட்டின் நிரந்தரக் கமிட்டியார் ஸ்ரீ தேவதாஸ் காந்தியின் கருத்தைப் பூரணமாக ஆதரித்துத் தீர்மானம் நிறைவேற்றியிருக்கிறார்கள். "வரம்பின்றி வசைமொழியைக் கையாளும் வழக்கத்தை சில பத்திரிகைகள் கடைப்பிடிக்கத் தொடங்கியிருக்கின்றன. துவேஷ விஷத்தைக் கக்கி, உண்மைகளைத் திரித்துக் கூறி, அபாண்டமான அவதூறுகளைக் கூறும் பத்திரிகைகள் நியாயமான பத்திரிகைச் சுதந்திரங்களுக்கு லாயக்கற்றவையாகும். அவ்விதம் எழுதுவோருக்குச் சிறிதும் ஆதரவு அளிக்கக் கூடாது. இவ்விஷயத்தில் அகில இந்தியப் பத்திரிகாசிரியர் மகாநாட்டின் மாகாணக் கிளை ஸ்தாபனங்களும், மாகாணப் பத்திரிகை ஆலோசனைக் கமிட்டிகளும் கவனம் செலுத்தி, ஆபாச வசைப் பத்திரிகைகள் சம்பந்தமாகத் தகுந்த முறைகளைக் கைக்கொள்ள வேண்டும். அத்தகைய பத்திரிகைகள் மீது சர்க்கார் எடுத்துக் கொள்ளும் நடவடிக்கைகளுக்கு ஆதரவு தர வேண்டும்" என்பதே தீர்மானத்தின் சாராம்சம். பத்திரிகை உலகின் புல்லுருவிகளான ஆபாசப் பத்திரிகைகளால் இந்தியாவின் பெருமை, பண்பாடு, ஒழுக்கம், பாஷை எல்லாவற்றுக்கும் மிகுந்த கேடு விளையும். அத்தகைய பத்திரிகைகளைப் பொது ஜனங்கள் ஏறெடுத்துப் பார்ப்பதில்லை என்று உறுதி கொள்ள வேண்டும்.

# உலக மேடை சங்கீத வித்வான்கள்


















# ஜகத்தினைக் காத்திடுவோம்

சுதந்திர இந்தியாவின் அரசியல் திட்டம் உருவாகி வருகிறது. அது இன்னும் பூர்த்தி பெறவில்லை.

இந்தியா சுதந்திரம் பெற்ற பிறகு தான் அரசியல் திட்டம் உருவாகத் தொடங்கியது. ஆனால், அதற்கு அஸ்திவாரம் பல வருஷங்களுக்கு முன்பே அமைக்கப் பெற்று விட்டது!

அந்த அஸ்திவாரம் எத்தகையது என்பதை மகா கவி பாரதியார் பின்வருமாறு கூறியிருக்கிறார்:—

"தீரத்திலே படை வீரத்திலே—நெஞ்சில்
ஈரத்திலே உபகாரத்திலே
சாரத்திலே மிகு சாத்திரம் கண்டு
தருவதிலே உயர் நாடு!"

கவியரசரின் இந்தக் கருத்தையே இந்தியாவின் முடிசூடா மன்னரான பண்டித ஜவாஹர்லால் நேரு இப்போது வெளியிட்டிருக்கிறார்.

"உலகத்தில் அமைதி ஏற்பட வேண்டும் என்பதே இப்போது நம்முடைய முக்கிய லட்சியம். இந்தியா ஓர் உலக வல்லரசாக உருவாகியிருக்கிறது. நாம் எந்த வல்லரசின் கட்சியிலும் சேரமாட்டோம். உலகிலே யுத்தத்தைத் தடுத்து அமைதியும் ஆனந்தமும் ஏற்படுவதற்காக நமது சக்தி முழுவதையும் உபயோகிப்போம்" என்று ஜவாஹர்லால்ஜி இந்திய பார்லிமெண்டில் கூறியிருக்கிறார்.

உலகத்திலே எத்தனையோ சாம்ராஜ்யங்கள் தோன்றின. அவையெல்லாம் இருந்த அறிகுறியே தெரியாமல் இன்று மறைந்து விட்டன. அவையாவும் ஆத்ம சக்தியின்றி பலாத்காரத்தையே அடிப்படையாகக் கொண்டு அமைந்ததால்தான் அவைகள் நீடித்து நிற்க முடியவில்லை. சென்ற மகா யுத்தத்தில் வெற்றி பெற்றும் கூட பிரிட்டிஷார் தங்களுடைய சாம்ராஜ்யத்தைப் பாதுகாத்துக் கொள்ள முடியவில்லை. சென்ற இரண்டு மகா யுத்தங்களிலும் பிரிட்டிஷார் வெற்றி பெறுவதற்குக் காரணமாக இருந்த அமெரிக்கா உலகின் அமைதியை நிலை நிறுத்துவதற்குச் சக்தியற்றதாக இருக்கிறது.

மூன்றாவது மகா யுத்தம் ஏற்படுமா? ஏற்படாதா? இது பற்றி இராணுவ நிபுணர்களிடையே, அரசியல் பண்டிதர்களிடையே அபிப்பிராய பேதம் இருந்து வருகிறது.

ஆனால், ஒரு முக்கிய விஷயத்தை எல்லோரும் கவனிக்க வேண்டும். முதலாவது மகா யுத்தம் முடிந்தபின் பல நாடுகளும் போரில் சலிப்புற்று ஆயுத பரிகரணம் செய்தன. மற்றொரு யுத்தம் ஏற்படாதென அவை நினைத்தன. ஆனால், யுத்தம் ஏற்பட்ட பின்தான் அந்த நாடுகள் மீண்டும் தங்களுடைய யுத்த தளவாடங்களை அவசரம் அவசரமாகப் பெருக்கின.

எனினும், இந்தத் தடவை ஒரு நாடும் ஏமாந்து போக விரும்பவில்லை! யுத்தம் முடிந்த தினத்திலிருந்தே எல்லா நாடுகளும் மற்றொரு மகா யுத்தத்துக்காகப் போர்த் தளவாட உற்பத்தியில் மும்முரமாக ஈடுபட்டு வருகின்றன!

ஜெர்மனியிலிருந்தும் ஜப்பானிலிருந்தும் வல்லரசுகளின் ஆதிக்கம் வாபஸாகி விட்டால், அந்த இரு நாடுகளும் கூட மீண்டும் போர்த் தளவாடங்களைப் பெருக்க ஆரம்பித்து விடலாம்!

ஒவ்வொரு நாடும் யுத்தக் கருவிகளைப் பெருக்கி வருவது ஒருபுறமிருக்க, உலக நாடுகள் இரண்டு கட்சிகளாகப் பிரிந்து நிற்கின்றன. ஒரு கட்சிக்கு ருஷ்யாவும் மற்றொரு கட்சிக்கு அமெரிக்காவும் தலைமை வகித்து வருகின்றன.

அணு குண்டுக்கு அண்ணனான ஒரு புதிய நாசக் கருவியைக் கண்டு பிடித்து விட்டதாக அமெரிக்கா பெருமையடித்துக் கொள்கிறது.

"அமெரிக்காவின் கட்சியில் சேர்ந்தால், ஜாக்கிரதை!" என்று ருஷ்யா, ஐரோப்பிய நாடுகளை ஒன்றன் பின் ஒன்றாக எச்சரித்து வருகிறது.

* * *

இந் நிலையில், யுத்தம் வராமல் தடுக்க வேண்டிய பெரும் பொறுப்பை இந்தியா ஏற்றுக் கொள்ள வேண்டும் என்னும். அவ்வாறு ஏற்றுக்கொள்வதாயின் இந்தியா எந்தக் கட்சியிலும் சேராமல் இருக்க வேண்டியது அவசி

யம் என்றும் இந்தியாவின் பிரதம மந்திரி கூறுகிறார்.

சுதந்திரம் பெற்றதும் பெறாததுமாக இந்தியா ஆசியா முழுவதற்கும் வழி காட்டியது. இப்போது உலகத்துக்கும் வழிகாட்ட முன் வந்திருப்பது முற்றிலும் பொருத்தமேயாகும்.

ஏனெனில், சுதந்திரத்தை இழந்திருந்த காலத்தில் கூட இந்தியாவின் ஆத்ம சக்தி குன்றியதில்லை.

ஸ்ரீ சங்கரரையும், புத்தரையும், அசோகரையும் பெற்றெடுத்த பாரத அன்னை, அடிமைப் பட்டிருந்த காலத்தில் கூட ராமகிருஷ்ணரையும் விவேகானந்தரையும் காந்தி மகானையும் ரமண ரிஷியையும் பெற்றெடுத்தாள் அல்லவா? பாரத நாடு ஆத்ம சக்தியை இழந்திருக்குமாயின், அத்தகைய மகான்கள் ஜனித்திருப்பார்களா?

சீன—ஜப்பான் யுத்தம் உக்ரமாக நடந்து கொண்டிருந்த போது, சாத்துவிக முறையைக் கைக் கொள்ளும்படி மகாத்மா காந்தி சீன சர்க்காரைக் கேட்டுக் கொண்டார். பின்னர் ஐரோப்பிய நாடுகளையும் அவ்வாறே கேட்டுக் கொண்டார். அப்போது மேற்படி நாடுகள் அந்தக் கோரிக்கைக்குச் செவி சாய்க்கவில்லை.

ஆனால், சாத்துவிக முறையைப் பரிசீலனை செய்து பார்க்கவேண்டிய காலம் வந்திருக்கிறது என்று இப்போது அமெரிக்காவிலும் ஐரோப்பாவிலும் பல பிரமுகர்கள் கூற ஆரம்பித்திருக்கிறார்கள்.

உலகப் பிரச்னைகளைத் தீர்க்க இந்தியாவின் உதவியும் ஒத்துழைப்பும் அத்தியாவசியம் என்பதை உணர்ந்து அமெரிக்க ஜனாதிபதி ட்ரூமன் நமது மாபெரும் தலைவர் ஜவாஹர்லால் ஜியை அமெரிக்காவுக்குப் பரிந்து அழைத்திருக்கிறார்.

போர்க் கருவி மயமான பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தை எதிர்க்க இந்தியா சாத்துவிக முறையைக் கையாண்டு வந்தபோது அதைக் குறித்து உள் நாட்டிலும் வெளி நாடுகளிலும் ஏளனம் செய்தவர்கள் உண்டு. ஆனால், இந்தியாவின் ஆத்ம சக்தி,—காந்தி மகான் உபதேசித்த சாத்துவிக முறை வெற்றியடைந்ததைக் கண்டதும் உலகம் முழுதும் ஆச்சரியத்தில் மூழ்கியது.

தலையிலிருந்து கால் வரையில் கொடிய ஆயுதங்களையே அங்கங்களாகக் கொண்ட ஒரு கூட்டத்தினரை, நிராயுத பாணிகளான ஒரு கூட்டத்தினர் எதிர்த்து வெற்றி பெற முடியும் என்பதை எவரும் நம்பவேயில்லை.

கண் முன்னால் அந்த அதிசயம் நடந்த பின்தான் எல்லோருக்கும் நம்பிக்கை உண்டாயிற்று. கத்தியின்றி இரத்தமின்றி காரியத்தைச் சாதிக்கும் அற்புதமான கருவி ஒன்றிருக்கிறது என்பதை இந்தியாவில் நடந்த சாத்துவிகப் போரின் மூலம் உலகம் அறிந்து கொண்டது.

இந்தியா சாத்துவிக முறையை விடுத்துக் கொடிய ஆயுதங்களையும், சதியையும், சூழ்ச்சியையும் கைக் கொண்டிருக்குமாயின் என்ன நேர்ந்திருக்கும் என்பதைச் சிறிது கற்பனை செய்து கொள்வோம்.

பாலஸ்தீனமும் சீனாவும் என்ன கதிக்கு உள்ளாகி வருகிறதோ, அதே கதிக்கு நமது அருமை நாடு உள்ளாகியிருக்கும். இரத்த வெள்ளத்தில் துவேஷ விதை முளை விட்டிருக்கும்.

ஆனால் முடிவில்லாத அத்தகைய விபரீதங்களுக்கு இந்தியா இலக்காகி விடாமல் காந்தி மகான் காப்பாற்றினார்.

இந்தியாவில் வெற்றிபெற்ற அதே முறை உலகிலும் வெற்றி பெறும் என்பதில் சந்தேகமில்லை.

அந்த முறையைக் கண்டு பிடித்த இந்தியாதான், உலகமும் அதை அனுஷ்டித்து உய்வதற்கு வழிகாட்ட வேண்டும்.

மற்றொரு யுத்தம் நேர்ந்தால் உலகம் என்னவாகும்?

''அந்த யுத்தத்தில் யார் வெற்றி பெறுகிறார்கள் என்பது முக்கியமில்லை. யார் வெற்றி பெற்றாலும் எதிர்கால சந்ததிகள் சகிக்க முடியாத துயரத்துக்கும் துன்பத்துக்கும் உள்ளாவது நிச்சயம். பிறகு மானிட வர்க்கத்தின் முன்னேற்றமெல்லாம் மண்ணாகிவிடும். அத்தகைய நிலைமை பயங்கரமானது. எனவே, அதைத் தடுத்து உலகத்தைக் காப்பாற்ற ஏதாவது செய்தாக வேண்டும்'' என்று பண்டித ஜவாஹர்லால் நேரு கூறுகிறார்.

இந்தியாவுக்கு மண்ணாசை அணுவளவும் இல்லை. பாரத நாடு எக்காலத்திலும் அதர்ம யுத்தத்திலோ, ஆக்கிரம அநீதியிலோ ஈடுபட்டதில்லை. பாகிஸ்தான் உள்பட சகல நாடுகளுடனும் இந்தியா நட்புக் கொண்டிருக்கிறது. அமெரிக்காவையோ அல்லது ருஷ்யாவையோ இந்தியா விரோதியாகக் கருதவில்லை.

எனவே உலகிலே யுத்தம் வராமல் தடுக்கும் முயற்சியில் இந்தியாவின் உதவியை எந்த வல்லரசும் எந்தச் சிற்றரசும் வரவேற்கும்.

# சரபோஜியின் கலைக் கோவில்

ரா.கி.

பழமையான பெருங் குலத்தில் வந்த அரசர் அவர். போர்க்களத்தில் புறமுதுகிடுதலை அறியாத வீரப் பரம்பரையில் பிறந்த மன்னர் அவர். ஆயினும் அவருக்கு இப்போது போரில் நம்பிக்கையில்லை. எதிரிகள் படையெடுத்து வருவதாக அரசரிடம் வந்து சொன்னார்கள். "வரட்டும்; இராஜ்யத்தையும் எடுத்துக் கொள்ளட்டும்; எனக்கு இந்த இராஜ்யம் தேவையில்லை; இராஜ்யம் ஆளுவதைக் காட்டிலும் எவ்வளவோ சந்தோஷம் உண்டாகும் முறையில் மிச்சமுள்ள என் வாழ்நாளைக் கழிப்பேன்" என்றார் அரசர்.

எனவே, கோட்டை விழுந்தது. தலைநகரம் பிடிபட்டது. எதிரிகள் அரசரின் அரண்மனையைச் சூழ்ந்துகொண்டு உள்ளே அரசர் இருப்பார் என்று தேடினார்கள். ஆனால் அரண்மனையில் அரசர் இல்லை. எங்கே போயிருக்கக் கூடும் என்று விசாரித்துத் தெரிந்து கொண்டார்கள். அரசர் இருந்த கட்டிடத்துக்கு விரைந்து சென்றார்கள்.

"இங்கே வந்து என்ன செய்கிறீர்? இங்கே ஒளிந்து கொண்டால் கண்டுபிடிக்க மாட்டோம் என்று எண்ணமா?" என்று படையெடுத்து வந்த பகைவர் சைன்யத்தின் தலைவன் கேட்டான்.

"இங்கே நான் ஒளிந்து கொண்டிருக்கவில்லையே! யாவரும் அறியப் பகிரங்கமாகவே வந்தேன். இங்கே எப்படி ஒளிந்து கொள்ள முடியும்? ஒளிவதற்கு இடம் எங்கே?" என்றார் அரசர்.

"அப்படியானால் இங்கே என்ன செய்து கொண்டிருக்கிறீர்?" என்று கேட்டான் படைத்தலைவன்.

"தெரியவில்லையா? சுற்று முற்றும் பாருங்கள்!" என்று அரசர் நாலாபுறமும் சுட்டிக் காட்டினார்.

நாலா புறத்திலும் வரிசை வரிசையாகப் புத்தகங்கள் அடுக்கப்பட்டிருந்தன. அச்சிட்ட புத்தகங்கள் ஆயிரக் கணக்கில் இருந்தன. உறுதியான காகிதத்தில் அழகாகக் கையினால் எழுதிய புத்தகங்கள் இருந்தன. ஓலைச் சுவடிகள் ஏராளமாக இருந்தன. சம்ஸ்கிருத ஓலைச் சுவடிகள் முப்பதினாயிரம் இருந்தன. தமிழ் ஓலைச் சுவடிகளும் மகாராஷ்டிர ஓலைச் சுவடிகளும் ஆயிரக் கணக்கில் இருந்தன.

அரசனைத் தேடிக் கொண்டுவந்த பகைவர்கள் அச்சிட்ட புத்தகங்களைப் பார்த்து அதிசயப் பட்டார்கள். ஆங்கில பாஷையிலும் பிரஞ்சு பாஷையிலும் ஜெர்மன் பாஷையிலும் அச்சிட்ட ஆயிரக்கணக்கான புத்தகங்கள் இருந்தன. விதவிதமான, அதிசய அதிசயமான புத்தகங்கள் இருந்தன. பிரசித்திபெற்ற இலக்கிய நூல்களும் இருந்தன.

கல்வியில் அந்த அரசருக்கிருந்த ஆர்வத்தைப் பார்த்துப் பகைவர் படைத்தலைவன் அதிசயித்தான். அதை ஊர்ஜி

தம் செய்து கொள்ளும் பொருட்டு ஒரு கேள்வி கேட்டான். "அரசரே! உம்முடைய ராஜ்யம் பறி போகிற சமயத்தில் இவ்விடம் வந்து உட்கார்ந்திருக்கிறீரே? எதற்காக?" என்றான்.

"இராஜ்யத்தைக் காட்டிலும் இந்தப் புத்தக சாலையே எனக்கு முக்கியமானது. அதனால்தான் கூடுமாயின் இதைக் காப்பாற்றுவதற்காக இங்கே வந்தேன்! வருகிறவர்கள் எப்படிப்பட்ட மனிதர்களோ, இந்தப் புத்தகசாலையை என்ன செய்து விடுவார்களோ என்று கொஞ்சம் பயமாக இருந்தது!" என்றார் அரசர்.

"இங்கிலீஷ் புத்தகங்களும் பிரஞ்சுப் புத்தகங்களும் வைத்திருப்பது சரிதான். ஆனால் வரிசை வரிசையாக, கட்டுக் கட்டாக, பனை ஓலைச் சுவடிகள் வைத்திருக்கிறீர்களே? இவை என்னத்திற்கு? இவற்றை யெல்லாம் நெருப்பிலே போட்டுக் கொளுத்தி விடலாம்!" என்றான் படைத் தலைவன்.

"ஐயோ! வேண்டாம்!" என்று அரசர் அலறி விட்டுக் கூறினார்:—"இந்த ஓலைச் சுவடிகள் எல்லாம் விலைமதிக்க முடியாத பொக்கிஷங்கள். எத்தனையோ பணம் செலவு செய்து, எவ்வளவோ அரும்பாடு பட்டு, தேசமெல்லாம் ஆள் அனுப்பித் தேடி, இந்தச் சுவடிகளைத் திரட்டிச் சேர்த்தேன். என்னுடைய ராஜ்யத்தை எடுத்துக் கொண்டது போல் என் உயிரையும் வேணுமானால் எடுத்துக் கொள்ளுங்கள். ஆனால் இந்த ஓலைச் சுவடிகளைக் காப்பாற்றுங்கள்!"

அரசருடைய இலக்கியக் காதல் பகைவரின் படைத் தலைவனுக்கு ஆச்சரிய மளித்தது. அவரிடம் மரியாதையும் உண்டாயிற்று. ஆனாலும் அவருடன் மீண்டும் வாதமிட விரும்பி, "அப்படி இந்த ஓலைச் சுவடிகளில் என்னதான் அதிசயம் இருக்கிறது?" என்று கேட்டான்.

"இந்த ஓலைச் சுவடிகளில் இலக்கியங்கள் இருக்கின்றன: இதிகாச புராணங்கள் இருக்கின்றன; காவியங்களும் கணித சாஸ்திரங்களும் இருக்கின்றன; அருமையான சங்கீதக் கலை நூல்கள் இருக்கின்றன: ஒப்பற்ற வைத்திய நூல்கள் இருக்கின்றன; அரசியல் சாஸ்திரங்கள் இருக்கின்றன; யுத்த சாஸ்திரங்கள் இருக்கின்றன!......" என்று அரசர் அடுக்கிக் கொண்டே போனார்.

"ஓகோ! யுத்த சாஸ்திரம்கூட இருக்கிறதா? அப்படியானால், படையெடுத்து வரும் பகைவரின் படைகளைத் தடுத்து நிறுத்தும் முறை அந்த சாஸ்திரத்தில் சொல்லப் பட்டிருக்கிறதா?" என்று படைத் தலைவன் கேட்டான்.

"ஆகா! பகைவர்களைத் தடுக்கப் பலமுறைகள் சொல்லப் பட்டிருக்கின்றன. ஒரு முறைப்படி, பகைவர் படைகளில் உள்ள வீரர்களை யெல்லாம் பைத்தியம் பிடிக்க அடித்து விடலாம். இதோ கொஞ்சம் கேளுங்கள்; இதில் உள்ளதைப் படித்துக் காட்டுகிறேன்!" என்றார் அரசர்.

"படித்துக் காட்ட வேண்டாம். பகைவர்களைப் பைத்தியம் பிடிக்கச் செய்யும் முறை இந்த சாஸ்திரத்தில் இருந்தால், அதை ஏன் நீர் கையாளவில்லை!" என்று படைத் தலைவன் கேட்டான்.



"ஐயா! நல்ல கேள்வி கேட்டீர். தெளிந்த அறிவுடன் இருப்பவர்களை இந்த முறைப்படி வைத்தியம் பிடிக்கச் செய்யலாம். ஏற்கெனவே வைத்தியம் பிடித்திருப்பவர்களை ஒன்றும் செய்ய முடியாது!" என்றார் அரசர்.

இதைக் கேட்ட படைத் தலைவனும் அவனுடன் வந்தவர்களும் சிரித்தார்கள். இந்த அரசர் சாதாரண மனிதரல்ல வென்றும், காமக் குரோதங்களைக் கடந்து சன்மார்க்க சமநிலை அடைந்த தத்துவ ஞானி என்றும் உணர்ந்தார்கள்.

புத்தகசாலையும் அதிலிருந்த அச்சுப் புத்தகங்களும் ஓலைச் சுவடிகளும் அபாய மின்றித் தப்பிப் பிழைத்தன.

இந்தப் புத்தக சாலைதான் தஞ்சாவூரில் உள்ள **சரஸ்வதி மகால்** புத்தக சாலை. அதை ஸ்தாபித்துக் காப்பாற்றிக் கொடுத்த அரசர்தான் சம்ராட் சிவாஜி வம்சத்தில் வந்த சரபோஜி மகாராஜா.

• • •

மேற்கூறிய நிகழ்ச்சி எவ்வளவு தூரம் சரித்திர ஆதாரம் பெற்றது என்று நிச்சயமாகச் சொல்ல முடியாது. ஆனால் நிச்சயமாகச் சொல்லக் கூடிய நிகழ்ச்சி இது:—தஞ்சாவூர் ராஜ்யம் பிரிட்டிஷ் ராஜ்யத்துடன் சேர்த்துக் கொள்ளப் பட்ட சமயத்தில், பிரிட்டிஷ் நிர்வாகி சரபோஜி மகாராஜாவிடம் "நீங்கள் மிக்க நல்ல முறையில் நடந்து கொண்டிருக்கிறீர்கள். உங்களுக்கு ஏதாவது செய்து எங்கள் சந்தோஷத்தை வெளியிட விரும்புகிறோம். என்ன செய்ய வேண்டும்? சொல்லுங்கள்!" என்றார்.

"எனக்கென்று ஒன்றும் செய்ய வேண்டாம். இந்த சரஸ்வதி மகால் புத்தகசாலையைப் பத்திரமாய் வைத்துக்கொண்டு காப்பாற்றினால் அதுவே போதும்" என்று சொன்னார் சரபோஜி மகாராஜா.

"அது போதாது. உங்களைக் கௌரவப் படுத்த விரும்புகிறோம். உங்களைப் போல ஒரு சிலை செய்து வைக்கிறோம்" என்றார் பிரிட்டிஷ் அதிகாரி.

"என்னைப் போல் சிலை செய்து வைக்கிறீர்களா? ரொம்ப நல்லது. ஆனால் நான் பயபக்தியுடன் கரங்குவித்துக் கும்பிட்டுக்கொண்டு நிற்பதுபோலச் சிலை செய்யுங்கள். அதைச் சரஸ்வதி மகாலின் பிரதான வாசலுக்கு எதிரே நாட்டி வையுங்கள். வருங்கால சந்ததிகளுக்கு என்னைப் பற்றி நினைவு வந்தால், இந்த சரஸ்வதி மகாலை ஸ்தாபித்தவன் நான்

இந்தமாதிரி ஓலைச் சுவடிகள் முப்பதினாயிரத்துக்கு மேலே தஞ்சாவூர் சரஸ்வதி மகாலில் சேர்த்துவைக்கப்பட்டிருக்கின்றன. நூறு வருஷத்துக்கு முன்னால் இந்த அற்புத புத்தகசாலையை அமைத்த சரபோஜி மகாராஜாவின் முக சித்திரத்தையும் அவருடைய சிலை வைத்திருக்கும் மண்டபத்தின் பொலிவையும் இந்த இதழ் அட்டைப்படத்தில் காணலாம்.





தஞ்சாவூரை அரசுபுரிந்த மகாராஷ்டிர மன்னர்களின் தர்பார் மண்டபம்

என்பதையே நினைத்துக் கொள்ளவேண்டும்!'' என்றார் சரபோஜி மகாராஜா.

அவருடைய விருப்பத்தைப் பிரிட்டிஷ் நிர்வாகிகள் நிறைவேற்றி வைத்தார்கள். சரபோஜி மகாராஜாவின் கம்பீரமான சிலையை வெள்ளைச் சலவைக் கல்லில் செய்வித்து, சரஸ்வதி மகாலின் முன் வாசலுக்கு எதிரே ஒரு தனி மண்டபம் கட்டி, அதில் நிலைநாட்டியிருக்கிறார்கள். அற்புதமான காட்சி! நம் முன்னோர்கள் கலைத் தேவியிடம் கொண்டிருந்த பக்திக்கு ஒப்பற்ற அத்தாட்சியாக விளங்கும் காட்சி!

பிரசித்தி பெற்ற தஞ்சாவூர்ப் பெரிய கோவிலின் மூலம் ராஜ ராஜ சோழனின் பெருமை விளங்குவது போல இந்தச் சரஸ்வதி மகால் புத்தகசாலையின் மூலம் சரபோஜி மகாராஜாவின் பெருமையும் திகழ்கிறது.

இவ்வளவு சிறப்பு வாய்ந்த சரஸ்வதி மகால் புத்தகசாலையைப் பார்க்கும் பாக்கியம் சென்ற மாதத்திலேதான் எனக்குக் கிடைத்தது. இப்போதாவது பார்க்கக் கொடுத்து வைத்ததே என்பதை எண்ணிச் சந்தோஷப் படுகிறேன்.

* * *

சரஸ்வதி மகால் கட்டிடத்தை நெருங்கும்போது அவ்வளவு அற்புதமான கலைக் கோயிலை நெருங்குகிறோம் என்ற உணர்ச்சி உண்டாகவில்லை. சரஸ்வதி மகாலின் சுற்றுப் புறத்தில் தற்சமயம் பிண்ணாக்கு வாசனை ஜமாய்த்துக் கொண்டிருக்கிறது! அக்கம் பக்கம் உள்ள பழைய அரண்மனைக் கட்டிடங்களில் கூட்டுறவுச் சங்கத்தார் பிண்ணாக்கு மூட்டைகளை அடுக்கி வைத்திருக்கிறார்கள் என்று தெரிந்தது. பிண்ணாக்கையோ அதன் நறுமணத்தையோ குறித்து நான் ஆட்சேபிக்கவில்லை. உணவுப்பொருள் உற்பத்தியைப் பெருக்குவதற்கு மிக உபயோகமான உரம் அல்லவா பிண்ணாக்கு? ஆனால் அவ்வளவு அருமையான பொருளை வீணாகச் சேர்த்து வைத்திருப்பதைத் தான் ஆட்சேபிக்கிறேன். ''இங்கே வருகிற பிண்ணாக்கு மூட்டைகள் திரும்பிப் போகிறதாகவே தெரியவில்லை!'' என்றார்கள் என்னுடன் வந்த தஞ்சாவூர் நண்பர்கள். ''அப்படியானால் நமது விவசாய மந்திரி கனம் மாதவமேனனை ஒரு தடவை சரஸ்வதி மகால் பார்ப்பதற்கு அழைப்பதுதானே?'' என்று சொன்னேன். ''நம்முடைய கல்வி மந்திரி ஒரு தடவை வந்திருந்தார்; அதன்பலன் விபரீதம் ஆயிற்று!'' என்றார் ஒரு தஞ்சாவூர்க்காரர். அந்த விபரீதம் என்னவென்பதைச் சிரமப்பட்டு விசாரித்துத் தெரிந்து கொண்டேன்.

கல்வி மந்திரி கனம் அவிநாசிலிங்கம் அவர்களும், அண்ணாச்சி ஸ்ரீ வேதரத்தினம் அவர்களும் அத்தியந்த நண்பர்கள். ஆனால் எதிலாவது அபிப்பிராய பேதம் ஏற்பட்டால் காரசாரமாக வாதமிட்டுக் கொள்வார்கள். அண்ணாச்சி அவர்கள்தான் கல்வி மந்திரியைச் சரஸ்வதி மகால் பார்ப்பதற்கு அழைத்து வந்தவர். சாயங்காலம் இருவரும் ஒரு பொதுக் கூட்டத்தில் பேசினார்கள். கல்வி மந்திரி அவிநாசிலிங்கம் தமது நண்பர் ஸ்ரீ வேதரத்தினத்துக்கும் பொதுவாகத் தஞ்சாவூர்க்காரர்களுக்கும் ஒரு டோஸ் கொடுக்க விரும்பினார்.

"சின்னதைப் பெரிதாக்குவதில் தஞ்சாவூர்க்காரர்கள் வெகு சமர்த்தர்கள். இன்று காலை சுவாமி மலைக்குப் போயிருந்தேன். அங்கே ஒரு சிறு மண்மேடுதான் இருக்கிறது. அதை 'மலை' என்கிறார்கள். எங்கள் கோயமுத்தூர் ஜில்லாவில் எத்தனை பெரிய மலைகள் இருக்கின்றன தெரியுமா? அதுமாதிரிதான் இந்தச் சரஸ்வதி மகாலையும் பிரமாதப் படுத்துகிறார்கள்!......" என்று இந்த ரீதியில் கல்வி மந்திரி வெளுத்துக் கட்டினார்.

பிற்பாடு பேச எழுந்த அண்ணாச்சி வேதரத்தினம் கல்வி மந்திரிக்குப் பதில் சொன்னார்:—"எங்கள் தஞ்சாவூர் ஜில்லாவில் மலைகள் இல்லை என்பது உண்மைதான். அது இயற்கையின் நியதி. இருந்த ஒன்றிரண்டு மலையையும் நாங்கள் கலையாகச் செய்துவிட்டோம். ஆகையால் இப்போது தஞ்சாவூர் ஜில்லாவில் மலை இல்லாமற் போனாலும் கலை நிறைய இருக்கிறது. கோயமுத்தூர் ஜில்லாவில் மலை மட்டும் நிறைய இருக்கிறது; ஆனால் கலை கிடையாது. கலையை அறிந்து அநுபவிக்கும் சக்திகூடக் கிடையாது......"

இப்படியாக அந்த நண்பர்கள் ஒருவருக்கொருவர் பரிமாறிக்கொண்டார்கள் என்பதை அறிந்து கொண்டேன். நான் தஞ்சாவூர்க்காரனானதலால் அண்ணாச்சி வேதரத்தினத்தின் பதில் எனக்குத் திருப்தியளிப்பது இயற்கையேயல்லவா?

• • •

**கா**லிலே கொதிக்கும் வென்னீரை விட்டுக் கொண்டு, அதாவது அவசர ஜோலிகள் பலவற்றை வைத்துக் கொண்டு, சரஸ்வதி மகாலுக்குள் பிரவேசிக்கிறவர்களுக்கு அப்படி ஒன்றும் பிரமாதமாகத் தெரியாதுதான். "இதோ இவை அச்சுப் புஸ்தகங்கள்! இரண்டாயிரம் புஸ்தகம் இருக்குமா? சரி! இதோ இவை ஓலைச் சுவடிகள்! சமஸ்கிருதச் சுவடிகள் முப்பதினாயிரம்; தமிழ்ச் சுவடிகள் ஆயிரத்துச் சொச்சம்; மகாராஷ்டிரச் சுவடிகள் ஆயிரத்துச் சொச்சம். சரி! அவ்வளவுதானே? போகலாமா?" என்று இவ்விதம் பத்து நிமிஷத்தில் சரஸ்வதி மகாலைப் பார்த்துவிட்டுப் புறப்பட்டு விடலாம். தஞ்சாவூர்க் கோயிலுக்குப் போய், "ஓகோ! இதுதான் கோபுரமாக்கும்! இதுதான் கர்ப்பக் கிரஹமாக்கும்! ஓகோ! இவர்தான் பிரகதீசுவர ஸ்வாமியோ? சரி! இந்தச் சுவரில் எழுதிய சித்திரங்கள் ஆயிரம் வருஷத்துக்கு முந்தியவையோ?—அவ்வளவுதானே? போகலாமா?" என்று கால்மணி நேரத்துக்குள் கோயிலைச் சுற்றிப் பார்த்துவிட்டு வெளியே வந்துவிடலாம்.

ஆனால் கலையை அறிந்து அநுபவிக்கும் முறை இதுவல்ல. கலைக்கும் அவசரத்துக்கும் வெகு தூரம். வெளியில் அவசர ஜோலியை வைத்துக் கொண்டு சரஸ்வதி மகாலுக்குள் பிரவேசிப்பதில் பயனில்லை.

அவ்விதமின்றிக் கொஞ்சம் சாவகாசமாகவே சரஸ்வதி மகாலுக்குள் இருக்கும் இலக்கிய கலைச் செல்வங்களைப் பார்த்து அநுபவிப்பது என்று தீர்மானித்துக் கொண்டு அந்தக் கலைக் கோயிலுக்குள் பிரவேசிக்கலாம், வாருங்கள்!

(அடுத்த இதழில் முடியும்)



"என்ன ஸார் இது? சொந்தக் கார் வைத்துக் கொண்டு இப்படி பஸ்ஸுக்கு வந்து நிற்கிறீரே?"
"ஆமாம்! இப்பத்தான் பெட்ரோல் வரி உயர்ந்து போச்சே! கார் வச்சுக்கக் கட்டாது; பஸ்ஸிலேதான் போக வேணும்!"

"என்னங்க, சுவாமி! கொஞ்ச நாளாய் உம்மைக் காணுகிறதே இல்லையே! முன்னே யெல்லாம் அடிக்கடி வருவீரே?"
"எப்படி ஸார் அடிக்கடி வருகிறது? பஸ் சார்ஜ் ஏகப்பட்டது கொடுக்க வேண்டியிருக்கே!"

"என்ன முதலியார்வாள்! உங்களை நேரில் பார்க்கத்தான் முடிகிறதில்லேன்னு. அடிக்கடி கடிதமாவது போடக்கூடாதா?"
"எப்படி ஸார், அடிக்கடி போடுகிறது? கார்டு கவர் விலையைத்தான் உயர்த்தி விட்டார்களே?"

# அலை ஓசை

கல்கி

நாலாம் பாகம்



பிரளயம்

# பூர்வ கதை

ராஜம் பேட்டைப் பட்டாமணியம் கிட்டாவய்யர் தம்முடைய புதல்வி லலிதாவுக்காக வரன் தேடினர். புது டில்லியில் 'பெரிய உத்தியோகத்திலிருந்த சௌந்தர ராகவன் எம். ஏ. லலிதாவைப் பார்ப்பதற்காக வந்த இடத்தில், பம்பாயிலிருந்து வந்திருந்த கிட்டாவய்யரின் தங்கை பெண் சீதாவைப் பார்த்து அவளை மணக்க விரும்பினன். அவ்வாறே அவர்களுக்குத் திருமணம் நடந்தது. லலிதாவைத் தேவபட்டணத்து வக்கீலின் குமாரன் பட்டாபிராமனுக்குக் கலியாணம் செய்து வைத்தார்கள்.

பட்டாபிராமனும் எதிர்வீட்டு அமரநாதனும் லலிதாவின் சகோதரன் சூரியாவும் சிநேகிதர்கள். சூரியா படிப்பை இடையில் நிறுத்திவிட்டுக் காங்கிரஸ் சோஷலிஸ்ட் கட்சியில் சேர்ந்து தேச சேவையில் ஈடுபட்டான். ஹரிபுரா காங்கிரஸிலிருந்து புதுடில்லிக்குப் போனன்.

சௌந்தர ராகவனும் சீதாவும் சூரியாவும் ஆக்ராவுக்குத் தாஜ்மகால் பார்க்கச் சென்றார்கள். தாஜ்மகாலில் சௌந்தர ராகவனின் பழைய சிநேகிதியான தாரிணியைச் சந்தித்தார்கள். தாரிணியும் சூரியாவும் சிநேகிதர் ஆனர்கள். ரஜனிபூர் ஏரியில் படகிலிருந்து விழுந்து தத்தளித்த சீதாவைத் தாரிணி காப்பாற்றினள்.

சீதா சிறுவயதில் பம்பாயில் வசித்த காலத்தில் ரஸியா பேகம் என்னும் ஒரு ஸ்திரீ மர்மமாக வந்து அவளுக்கு ஒரு ரத்தின மாலை கொடுத்துவிட்டு வந்தாள். அந்த ஸ்திரீ புதுடில்லியில் ஒருநாள் இரவு இரத்தம் தோய்ந்த கத்தியுடன் வந்து சீதாவின் வீட்டில் ஒளிந்து கொண்டாள். அவள்தான் தாரிணியின் வளர்ப்புத் தாய் என்று சீதா அறிந்தாள். தாரிணியின் பிறப்பு சம்பந்தமாய் ஏதோ ஒரு மர்மம் இருப்பதாகத் தெரியவந்தது.

சூரியாவும் தாரிணியும் சிநேகமாயிருப்பது கண்ட சௌந்தரராகவனின் உள்ளத்தில் பொறாமைத் தீ கொழுந்து விட்டது. அவன் தாரிணியிடம் தன் காதலை வெளியிட்டான். அவள் அதை உறுதியாக நிராகரித்தாள்.

சூரியா 1942-ம் வருஷத்தில் ஆரம்பமான புரட்சி இயக்கத்தில் ஈடுபட்டு மாறுவேடத்துடன் தேசமெல்லாம் சுற்றிவந்தான். தேவபட்டணத்தில் பட்டாபிராமன் காங்கிரஸ் இயக்கத்தில் ஈடுபட்டுச் சிறையில் இருந்தான். அச்சமயம் அவனுடைய ஆண் குழந்தைக்கு ஆண்டு நிறைவு கொண்டாடினர்கள். அன்றைய தினம் சூரியா அங்கு வந்திருந்தது அறிந்து போலீஸார் அவனைப் பிடிக்கப் பார்த்தார்கள். எதிர்வீட்டு அமரநாதனின் உதவியால் சூரியா தப்பித்துப் புதுடில்லிக்குச் சென்றான்.

புதுடில்லியில் சீதாவின் இல்லற வாழ்க்கை நாளுக்குநாள் நரகமாகி வந்தது. அதற்குக் காரணம் தாரிணி தான் என்பதாக எண்ணி அவளைச் சீதா துவேஷித்தாள். புருஷன் மனைவி சண்டையில் ஒருநாள் சௌந்தர ராகவன் குழந்தை வசந்தியைப் பலமாக அடித்து விட்டான். அவனுடைய தாயார் காமாட்சி அம்மாள் குழந்தை வசந்தியுடன் சென்னைக்குச் சென்றாள்.

சீதா ஒருநாள் இரவு கைத்துப்பாக்கியால் சுட்டுக்கொண்டு சாக யத்தனித்த சமயத்தில் சூரியா வந்து அவளைத் தடுத்துக் காப்பாற்றினன். சீதா தன்னல் இனிமேல் சௌந்தர ராகவனுடன் வாழமுடியாது என்றும் தன்னை எங்கேயாவது அழைத்துக் கொண்டு போகும்படியும் சூரியாவிடம் வற்புறுத்திச் சொன்னள்.

சூரியா வந்துவிட்டுப் போனதை அறிந்து சௌந்தரராகவன் அவனைப் போலீஸாருக்குப் பிடித்துக் கொடுக்க யத்தனம் செய்தான்.

டில்லியில் ஜும்மா மசூதிக்குப் பக்கத்திலிருந்த மைதானத்தில் சூரியாவும் தாரிணியும் உட்கார்ந்து பேசிக் கொண்டிருப்பதைச் சில முரட்டு ஆட்கள் கவனித்துக் கொண்டிருந்தார்கள். தாரிணியைக் கைப்பற்றுவதற்கு உதவி செய்தால் சூரியாவுக்கு லட்சம் ரூபாய் தருவதாகச் சொன்னர்கள். சூரியா தாரிணியிடம் இதைச் சொல்லி எச்சரிக்கை செய்தான். அவள் அதை லட்சியம் செய்யவில்லை.

மேற்கூறிய முரட்டு ஆட்கள் மறுநாள் சீதாவைக் கைப்பற்றி மோட்டாரில் வைத்துக்கொண்டு ஓடினர்கள். இன்னொரு மோட்டாரில் தொடர்ந்து

வந்த சூரியா யமுனைப் பாலத்தி னருகில் நிறுத்தப்பட்டுப் போலீஸாரால் கைது செய்யப்பட்டான். சில நாளைக்கெல்லாம் போலீஸ் பாதுகாப்பிலிருந்து அவன் தப்பித்துக் கொண்டான்.

சீதாவைக் கைப்பற்றியவர்கள் அவளுக்கு மயக்கமருந்து கொடுத்து ஒரு சுதேச ராஜாவின் அரண்மனைக்குக் கொண்டு போனார்கள். அங்கே ராஜமாதாவும் ராஜகுமாரனும் சீதாவைப் பார்த்துப் பேசியபோது அவளைத் தாரிணி என்று நினைத்துத் தவறாகக் கொண்டுவந்து விட்டதாக ஏற்பட்டது. பிறகு சீதாவைத் திரும்பக் கொண்டு போய் ஆக்ராவில் விட்டுவிட்டார்கள். ஆக்ராவில் சீதாவின்பேரில் ஒரு திருட்டுக் கேஸ் தொடரப்பட்டது. ஒரு முஸ்லிம் கனவான் திருட்டைத் தாம் ஒப்புக் கொண்டு அவளை விடுவித்தார். கல்கத்தாவின் அமரநாதனும் அவனுடைய மனைவி சித்ராவும் இருப்பதைச் சூரியாவின் மூலம் அறிந்திருந்த சீதா கல்கத்தாவுக்குச் சென்றாள். அவள் ரயிலிலிருந்து இறங்கிச் சென்றபோது ஏற்பட்ட வெடிகுண்டு விபத்தினால் மூர்ச்சை யடைந்து வீதி ஓரத்தில் கிடந்தாள். அமரநாதனும் சித்ராவும் தெய்வாதீனமாக அவளைப் பார்த்துக் காப்பாற்றினார்கள்.

ஒரு வாரத்துக்கெல்லாம் மறுபடியும் போலீஸார் வந்து சீதாவைப் பாதுகாப்புச் சட்டத்தின்படி கைது செய்தார்கள். சீதா புரட்சி இயக்கத்தைச் சேர்ந்தவள் என்றும், அவளே தாரிணி என்ற மாறுபெயர் வைத்துக் கொண்டிருந்ததாகவும் போலீஸார் தவறாக நம்பி அவளைக் கைது செய்ததாகத் தெரிந்தது. ஆனால் சீதா போலீஸ் குற்றச்சாட்டை மறுத்துச் சொல்ல விரும்பவில்லை. சிறை வாசம் தனக்கு மன நிம்மதி அளிக்கும் என்று நம்பிச் சந்தோஷமாகச் சிறை புகுந்தாள்.

## முதல் அத்தியாயம்

# தாயின் மனக்குறை

இராஜம்பேட்டை கிராமத்தை நாம் பார்த்து ஏறக்குறைய ஒரு வியாழ வட்டம் ஆகிறது. கணக்காகச் சொல்லப்போனால் பதினொரு வருஷமும் பத்து மாதமும் ஆகிறது. பழைய தபால் சாவடிக் கட்டிடம் ஏறக்குறைய முன்னால் பார்த்த மாதிரியே காணப்படுகிறது. ஆனால் அக்கட்டிடத்தின் வெளிச் சுவரிலும் தூண்களிலும் சில சினிமா விளம்பரங்கள் ஒட்டப்பட்டிருப்பதைக் காண்கிறோம். விளம்பரம் ஒட்டப்படாத இடங்களில் "ஜெ ஹிந்த்!" என்றும், "நேதாஜி வாழ்க!" என்றும், "உலகத் தொழிலாளரே! ஒன்றுபடுங்கள்!" என்றும் எழுதப்பட்டிருக்கின்றன. எல்லாவற்றிலும் பெரிய கறுப்பு எழுத்தில் "கிட்டாவய்யர் ஒழிக!" என்று எழுதியிருப்பதைக் கண்டு திடுக்கிடுகிறோம்.

தபால் சாவடிக்கெதிரே சாலையில் கப்புங் கிளையுமாகப் படர்ந்திருந்த பெரிய ஆலமரத்தைக் காணவில்லை. இதனால் அந்தச் சாலையின் அழகு குன்றி வெறிச்சென்று இருந்தது. மிட்டாய்க்கடை இருந்த இடத்தில் இப்போது ரேஷன் கடை இருந்தது. கடைக்காரர் மனதுவைத்து எப்போது அரிசிப் படி போடுவார் என்று எதிர்பார்த்துக்கொண்டு நாலைந்து ஸ்திரீகள் கையில் கூடையுடன் நின்றார்கள்.

தபால் சாவடிக்குள்ளே ஜன நடமாட்டம் காணப்பட்டது. ஆனால் நமக்குத் தெரிந்தவர்கள் யாரும் அங்கில்லை. போஸ்டுமாஸ்டர், போஸ்டுமேன், ரன்னர்,—எல்லாரும் நமக்குப் புதியவர்கள். வரப்போகும் தபால் ஸ்ட்ரைக்கைப் பற்றி அவர்கள் பேசிக் கொண்டிருந்தார்கள். இந்தத் தெரியாத மனிதர்களை விட்டுவிட்டு நமக்குத் தெரிந்த மனிதர்கள் இன்னும் வசிக்கும் இராஜம்பேட்டை அக்கிரகாரத்துக்குப் போவோம்.

அக்கிரகாரத்தின் தோற்றத்தில் சில மாறுதல்கள் காணப்பட்டன. முன்னே நாம் பார்த்ததற்கு இப்போது இன்னும் சில வீடுகள் பாழடைந்து போயிருந்தன. கிட்டாவய்யரின் வீட்டு வாசலில் பந்தல் இல்லை. வீட்டின் முகப்பு களை குன்றிப் போயிருந்தது. ஆனால் சிமாச்சுவய்யரின் வீடு இப்போது முன்னைவிட ஜோராக இருந்தது. சிமாச்சுவய்யர் சரியான சமயத்தில் தேவபட்டணத்துக்குப் போய்

ஜவுளிக்கடை வைத்தார். திருமகளின் கடாட்சம் அவருக்கு அமோகமாகப் பெருகியது. பழைய வீட்டைத் திருத்தி நன்றாகக் கட்டியிருந்தார்.

கிட்டாவய்யருக்குச் சமீபகாலத்தில் சில கஷ்டங்கள் ஏற்பட்டிருந்தன. குடிபடைகளுக்கும் மிராசுதார்களுக்கும் குடியிருக்கும் மனைக்கட்டு விஷயமாக நெடுங்காலமாய்ச் சச்சரவு நடந்து கொண்டிருந்தது. சென்ற வருஷத்தில் கோர்ட்டில் மிராசுதார்களுக்குச் சாதகமாகத் தீர்ந்தது. இந்த வழக்கில் முன்னால் நின்று நடத்தும் பொறுப்பு கிட்டாவய்யரின் தலையில் சுமந்திருந்தது. இதனால் பண விரயம் அதிகமானதோடு குடி படைகள் விரோதத்தைச் சம்பாதித்துக் கொண்டிருந்தார்.

யாரும் எதிர்பாராத விபத்து ஒன்று கிட்டாவய்யருக்குச் சென்ற வருஷம் நேரிட்டது. சுற்றுப் புறங்களில் திருட்டுகளும் கொள்ளைகளும் அடிக்கடி ஏற்பட்டுக் கொண்டிருந்தன. திருட்டுக் குற்றத்துக்காகக் கைது செய்யப்பட்ட ஒரு கூட்டத்தினர் பட்டாமணியம் கிட்டாவய்யரைச் சம்பந்தப்படுத்தி வாக்குமூலம் எழுதி வைத்தார்கள். உடனே கிட்டாவய்யர், பட்டாமணியம் உத்தியோகத்திலிருந்து சஸ்பெண்டு செய்து வைக்கப்பட்டார். குற்றச் சாட்டுதலைப் பற்றிய போலீஸ் விசாரணையும் உத்தியோக விசாரணையும் நடந்தன. கடைசியாக, விரோதத்தின் பேரில் பொய்யாக எழுதிவைக்கப்பட்ட குற்றச்சாட்டு என்று ஏற்பட்டது. ஆயினும் விசாரணை நடந்து கொண்டிருந்த போது கிட்டாவய்யருடைய மனதில் ஏற்பட்ட வேதனைக்கு அளவே கிடையாது. வீட்டை விட்டு வெளியில் புறப்படுவதற்கே அவருக்கு வெட்கமாயிருந்தது. ஆயினும் வெளியில் கிளம்புவது அவசியமாகவும் இருந்தது. பணம் நிறையச் செலவாயிற்று. முடிவாக ஒன்றுமில்லை என்று ஏற்பட்ட போதிலும், "பணத்தைச் செலவழித்து அமுக்கிவிட்டார்!" என்ற பேச்சும் பராபரியாகக் காதில் விழாமற் போகவில்லை.

பத்து நாளைக்கு முன்பு கிட்டாவய்யர் தேவபட்டணத்துக்குப் போய்ச் சில நாளைக்கு முன்புதான் சிறையிலிருந்து விடுதலை யடைந்து வந்திருந்த தம் மாப்பிள்ளை பட்டாபிராமனைப் பார்த்து விட்டுத் திரும்பி வந்து கொண்டிருந்தார். இராஜம்பேட்டையிலிருந்து நாலு மைல் தூரத்தில் இராத்திரி பத்து மணிக்குக் கட்டை வண்டியில் வந்து கொண்டிருந்தபோது முக மூடி அணிந்திருந்த திருடர்கள் ஏழெட்டுப் பேர் வந்து சூழ்ந்துகொண்டு வண்டிக்காரனையும் கிட்டாவய்யரையும் நன்றாக அடித்துவிட்டு அவரிடமிருந்த மணிபர்ஸை அபகரித்துக் கொண்டு போய்விட்டார்கள்!

கிட்டாவய்யர் உடம்பெல்லாம் காயங்களுடன் வீட்டுக்கு வந்து சேர்ந்தார். அன்றிரவே அவருக்குக் கடுமையான சுரமும் வந்துவிட்டது.

இந்தச் செய்தியை அறிந்ததும் தேவபட்டணத்திலிருந்து பட்டாபிராமனும் லலிதாவும் குழந்தைகளுடன் புறப்பட்டு வந்தார்கள். இரண்டு நாள் இருந்துவிட்டுப் பட்டாபிராமன் போய் விட்டான். கிட்டாவய்யரும் சரஸ்வதி அம்மாளும் கேட்டுக் கொண்டதின் பேரில் லலிதாவையும் குழந்தைகளையும் இன்னும் சில நாள் இருந்துவிட்டு வரும்படி சொல்லிப் போனான்.

* * *

ரேழிப் பக்கத்துக் காமரா அறையில் போட்டிருந்த கட்டிலில் கிட்டாவய்யர் படுத்திருந்தார். அவருக்கு உடம்பு இப்போது சௌகரியமாகி விட்டது. ஆனாலும் முன் போல எழுந்து நடமாடும்படியான தெம்பு இன்னும் ஏற்படவில்லை. இப்போது அவர் அரைத் தூக்கமாயிருந்தார்.

வீட்டுக்குள்ளே கூடத்தில், பன்னிரண்டு வருஷத்துக்கு முன்னால் முதன் முதலில் பார்த்த காட்சியை இன்றைக்கும் பார்க்கிறோம். லலிதாவுக்கு அவளுடைய தாயார் சரஸ்வதி அம்மாள் தலை வாரிப் பின்னிக் கொண்டிருந்தாள். ஆனால் லலிதா முன்னைப் போல் இப்போது சின்ன வயதுக் கன்னிப்பெண் அல்ல. அவள் இரண்டு குழந்தைகளின் தாயார். அந்தக் குழந்தைகள் இருவரும்—பட்டுவும் பாலுவும்,—சற்றுத் தூரத்தில் உட்கார்ந்து பொம்மைகள் நிறையப் போட்டிருந்த ஒரு தமிழ் சஞ்சிகையைப் புரட்டிப் பார்த்துக் கொண்டிருந்தார்கள்.

லலிதாவின் முகமண்டலத்தில் அவ்வளவாகச் சந்தோஷம் குடிகொண்டிருக்கவில்லை. சோர்வும் வேதனையும் குடிகொண்டிருந்தன வென்றே சொல்லலாம். அவளுடைய கண்கள் கலங்கியிருந்தன. மழை பொழியத் தொடங்குவதற்குத் தயாராக இருக்கும் மாரிகாலத்து இருண்ட மேகங்களை அவளுடைய கண்கள் அச்சமயம் ஒத்திருந்தன. ஏதாவது ஒரு சின்னக் காரணம் ஏற்பட வேண்டியதுதான்; அவளுடைய கண்களிலிருந்து கண்ணீர் மழை சொரியத் தொடங்கிவிடும்.

அத்தகைய காரணத்தை ஏற்படுத்திக் கொடுக்க லலிதாவின் தாயார் சரஸ்வதி அம்மாள் இருக்கவே இருந்தாள். லலிதாவின் தலையை வாரிக் கொண்டே தன்னுடைய மனக் குறைகளையும் அந்த அம்மாள் வெளியிட்டுக் கொண்டிருந்தாள்.

"இறுக்கம் தாங்கவில்லை; ஆனால் பாழும் மழை மட்டும் பெய்ய மாட்டேன் என்கிறது! வயல்களில் பயிரெல்லாம் காய்கிறதாம்! தெய்வம் எப்போது கண் திறந்து பார்க்குமோ, தெரியவில்லை. இந்தக் கலியுகத்தில் தெய்வத்துக்கே சக்தி இல்லாமற் போய்விட்டதுபோல் தோன்றுகிறது. இல்லாவிட்டால் இந்தமாதிரி அக்கிரமங்கள் எல்லாம் உலகத்தில் நடக்குமா? உங்கள் அப்பா பெயரைச் சொன்னால் நாடு நகரம் எல்லாம் நடுங்கிக் கொண்டிருந்த காலம் உண்டு. இப்போது அவருடைய வண்டியைத் திருடர்கள் வழி மறித்து அடித்துப் பணப் பையைப் பிடுங்கிக் கொள்ளும் காலம் ஏற்பட்டுவிட்டது. ஒரு அதிகாரம், ஒரு அத்து,— இப்போதெல்லாம் கிடையாது. பயம் என்பதே இல்லாமல் போய்விட்டது......"

லலிதா குறுக்கிட்டு, "அம்மா! ஊரெல்லாம் அப்பா பெயரைக் கேட்டுப் பயந்து கொண்டிருந்த காலத்திலும் நீ மட்டும் பயப்படவில்லையே? எதிர்த்து எதிர்த்துப் பேசிக்கொண்டு தானே இருந்தாய்?" என்றாள்.

"நன்றாயிருக்கிறதடி நீ சொல்வது! என் மாதிரி புருஷனுக்குப் பயந்து எல்லாரும் நடந்தால் போதாதா? ஒரு வார்த்தை எதிர்த்துப் பேசுவதற்குக்கூட பயந்து பயந்து இருந்தபடியால்தான் இந்தக் குடும்பம் இந்தக் கதிக்கு வந்தது! நான் மட்டும் அடித்துப் பேசியிருந்தேனானால் இப்படியெல்லாம் நடந்திருக்குமா? உன்னுடைய கலியாணத்தையே எடுத்துக் கொள்! என் இஷ்டப்படி விட்டிருந்தால் இந்த இடத்தில் உன்னைக் கொடுத்திருப்பேனா? கிளியை வளர்த்துப் பூனை கையில் கொடுக்கிறது என்று சொல்வார்கள். அந்தமாதிரி உன்னுடைய கதி ஆகிவிட்டது..."

"ஏதாவது உளறாதே, அம்மா! குழந்தைகளின் காதில் விழப்போகிறது."

"விழுந்தால் என்ன? நன்றாய் விழட்டும். உன் பெண்ணும் பிள்ளையும் வேண்டுமானால் மாப்பிள்ளையிடம் போய்ச் சொல்லட்டும். எனக்கு ஒருவரிடத்திலும் பயம் கிடையாது. காங்கிரஸாம்! காந்தியாம்! இரண்டு வருஷம் ஜெயிலிலே இருந்து விட்டு வந்தாராம்! எதற்காக ஜெயிலுக்குப் போகவேணும்! திருடினாரா! கொள்ளையடித்தாரா? மாப்பிள்ளைக்குப் போட்டியாக இந்தப் பிராமணரும் ஜெயிலுக்குப் போய் விடுவாரோ என்று எனக்குப் பயமாயிருந்தது. ஏதோ நான் செய்த பூஜா பலத்தினால் அது ஒரு அவமானம் இல்லாமற் போயிற்று. உன் அகத்துக்காரர் இரண்டு வருஷம் ஜெயிலில் இருந்து விட்டுத்தான் வந்தாரே? என்ன பலனைக் கண்டார்? சிலபேர் காங்கிரஸிலே சேர்ந்து ஜெயிலுக்குப் போய் வந்துவிட்டு மெம்பர், கிம்பர் என்று ஆகிறார்களே? அப்படியாவது ஏதாவது உண்டா? அதுவும் இல்லை..."

"அம்மா! இவர் மற்றவர்களைப் போல் சட்டசபை மெம்பர் ஆவதற்காகவோ, வேறு உத்தியோகப் பதவிக்காகவோ ஜெயிலுக்குப் போகவில்லை. சுயராஜ்யத்துக்காகப் போனார்!......"

"சரி! அப்படியாவது சுயராஜ்யம் வந்ததா? சொல்லேன், பார்ப்போம்! யுத்தத்திலே ஹிட்லர் ஜெயித்து விடப் போகிறான்,—இங்கிலீஷ்காரன் வாயிலே மண்ணை வாரிப் போட்டுக் கொண்டு போய்விடப் போகிறான் என்று எல்லாருமாகச் சேர்ந்து சொன்னீர்கள். உன் அண்ணா சூரியா இருக்கிறானே, அந்த சமர்த்துப்பிள்ளை, உன் அப்பாவைப் பட்டாமணியம் வேலையை

விட்டுவிட வேண்டும் என்று சொன்னான். கடைசியில், என்ன ஆயிற்று? சுயராஜ்யத்தையும் காணோம், இயராஜ்யத்தையும் காணோம். அதுதான் போனால் போகிறது என்றால், இப்போதாவது மாப்பிள்ளை கோர்ட்டுக்குப் போய் நாலு பணம் சம்பாதிக்கலாம் அல்லவா? வக்கீல் வேலைக்குப் படித்து விட்டு வீட்டிலே கையைக் கட்டிக் கொண்டு உட்கார்ந்து கொண்டிருந்தால் என்ன பிரயோஜனம்? இல்லையென்றால், ஏதாவது உத்தியோகமாவது தேடிக் கொள்ள வேணும். சும்மாயிருந்தால் எப்படி ஜீவனம் நடக்கும்? நீயோ சம்சாரியாகி விட்டாய்! இங்கேயாவது முன்னைப்போல் கொட்டிக் கிடக்கிறதா? பணத்தினால் காசினால் அதிகம் செய்ய முடிகிறதா? அப்படிச் செய்தால்தான் என்ன? உனக்கு வைத்துக் கொண்டு வாழத் தெரியவில்லை. அவர்தான் சொன்னார் என்று தங்க ஒட்டியாணத்தை விற்று விட்டேன் என்று சொல்கிறாயே? உன்னுடைய சமர்த்தை என்னவென்று சொல்வது? ஸிம்பிள் லைப்பாம்! நல்ல ஸிம்பிள் லைப் வந்திருக்கு! கட்டிய பெண்டாட்டிக்கு ஒரு புருஷன் புதிதாக நகை பண்ணிப் போடா விட்டாலும், ஏற்கெனவே பண்ணிய நகையை விற்பானோ? இது என்னடி வெட்கக் கேடு?...''

"அம்மா! இப்படியெல்லாம் நீ அவரைப் பற்றிக் குறை சொல்வதாயிருந்தால், இரண்டு நாளைக்குப் பிறகு போகிறவள் இன்றைக்கே புறப்பட்டு விடுகிறேன்...'' என்றாள் லலிதா.

"போ! போ! இந்த நிமிஷமே புறப்பட்டு விடு! என் தலையெழுத்து அப்படி. நான் யாருக்கு என்னமாய் உழைத்தாலும் என் பேரில் யாருக்கும் ஈவிரக்கம் கிடையாது. தான் பெற்ற பிள்ளையும் பெண்ணும் தனக்கே சத்துரு என்றால், அது தலை எழுத்துத் தானே? பத்து மாதம் நான் உன்னை வயிற்றில் சுமந்து பெற்றெடுக்கவில்லையா? பெற்ற தாயாருக்கு ஒரு வார்த்தை பரிந்து சொல்லுவதற்குப் பாத்தியதை கிடையாதா?''

"என்னை நீ எவ்வளவு வேணுமானாலும் சொல், அம்மா! பொறுத்துக் கொள்கிறேன். ஆனால் அவரைப் பற்றி ஒன்றும் சொல்லாதே! நீ தானே அவரைத் தேடி என்னை அவருக்குக் கலியாணம் செய்து கொடுத்தாய்? இப்போது குறை சொல்லுவதில் என்ன பிரயோஜனம்?''

"நான் ஒன்றும் இந்த மாப்பிள்ளையைத் தேடிப் பார்த்துப் பிடித்துக் கொண்டு வரவில்லை. உன் அண்ணா சூரியா சொன்னான் என்று உன் அப்பா ஏற்பாடு செய்து விட்டார். ஆயிரம் ரூபாய் சம்பளக்காரனை நான் உனக்காக வரன் பார்த்திருந்தேன். கொடுத்து வைக்கவில்லை. பம்பாயிலிருந்து அந்த மகராஜி, — உன் அத்தை, — சரியான சமயம் பார்த்து அந்தப் பெண்ணையும் அழைத்துக் கொண்டு வந்து சேர்ந்தாள். பெண்ணைப் பார்க்க மாப்பிள்ளை வருகிற சமயத்திலே வீட்டில் வேறு பெண் இருக்கக் கூடாது என்று முட்டிக் கொண்டேன். என் பேச்சை யாரும் காதில் போட்டுக் கொள்ளவில்லை. நான் என்ன இங்கிலீஷ் படித்தவளா? நாகரிகம் தெரிந்தவளா? பட்டிக்காட்டு ஜடம்தானே? என் பேச்சை யார் கேட்பார்கள்? ஆனாலும் இந்தப் பட்டிக்காட்டு ஜடம் சந்தேகப்பட்டுச் சொன்னது போலவே நடந்து விட்டது. உன்னைப் பார்ப்பதற்காக வந்தவனை உன் அத்தங்கா சீதா மயக்கி விட்டாள். அவளிடம் என்ன மோகனாஸ்திரம் வைத்திருந்தாளோ, என்ன சொக்குப்பொடி வைத்திருந்தாளோ தெரியாது. வந்தவனும் பல்லை இளித்து விட்டான்! உன்னுடைய அதிர்ஷ்டம் கட்டையாகப் போய்விட்டது......!''

"இல்லவே இல்லை. என் அதிர்ஷ்டம் நன்றாயிருந்தது. அந்த ஆயிரம் ரூபாய் சம்பளக்காரனைச் சீதா கலியாணம் செய்து கொண்டாளே, அவனுடைய கதி என்ன ஆயிற்று? அவன் பட்ட கஷ்டமெல்லாம் உனக்குத் தெரியாதா, அம்மா! போன மாதத்திலே கூடச் சித்ரா கடிதம் எழுதியிருந்தாள். சீதாவின் புருஷன் ரொம்பப் பொல்லாதவன், அயோக்கியன் என்று. அதை யெல்லாம் சொல்லக் கூட எனக்குப் பிடிக்கவில்லை. அவனுக்கு என்னைக் கலியாணம் பண்ணிக் கொடுத்திருந்தால் நானும் சீதாவைப் போலத்தானே கஷ்டப்பட வேண்டும்?'' என்றாள் லலிதா.

"அப்படி ஒன்றும் கிடையாது. அந்தப் பெண் சீதாவுக்கு துக்கிரி ஜாதகம். அதனாலே அவள் போன இடம் அப்படியாயிற்று. உன்னை அந்த வரனுக்குக் கொடுத்திருந்தால் இப்போது ராஜாத்தி மாதிரி இருப்பாய்!"

"என்னுடைய ஜாதகம் அதிர்ஷ்ட ஜாதகமாயிருந்தால், நான் வாழ்க்கைப் பட்ட இடத்தில் சுபிட்சமாயிருக்க வேண்டுமே? அவ்விதம் ஏன் இல்லை?" என்று கேட்டாள் லலிதா.

"உன் அரட்டைக் கல்விக்கு என்னால் பதில் சொல்ல முடியாது. நீ போன இடத்தில் இப்போது என்ன குறைந்து போய்விட்டது? வீடு, வாசல், பணம், சொத்து, எல்லாந்தான் இருக்கிறது! நாமாகக் கஷ்டத்தை வரவழைத்துக் கொள்வதற்கு அதிர்ஷ்டம் என்ன செய்யும்? ஜாதகம் என்ன செய்யும்? உன் தங்க ஒட்டியாணத்தை விற்றுத்தான் சாப்பிட வேண்டும் என்று ஆகிவிடவில்லை. மாப்பிள்ளைக்கு ஏதோ கிறுக்குப்பிடித்திருக்கிறது. நீயும் சேர்ந்து கூத்தடிக்கிறாய்!" என்றாள் சரஸ்வதி அம்மாள்.

"சரி, அம்மா, சரி! தலை பின்னியாகிவிட்டதோ இல்லையோ? போதும், விடு!" என்றாள் லலிதா.

இவ்வளவு நேரமும் சரஸ்வதி அம்மாள் தன் பெண்ணின் கூந்தலை வாரி ஜடை போட்டுக் கொண்டிருந்தாள். கூந்தலை விட்டுவிட்டால் அப்புறம் லலிதாவை உட்காரவைத்துத் தன் மனக் குறைகளைக் கேட்கச் செய்ய முடியாது என்று சரஸ்வதி அம்மாளுக்குத் தெரிந்திருந்தது. ஆகையினாலேயே சிறிதும் அவசரப்படாமல் சாவகாசமாகக் கூந்தலைவாரிப் பின்னிவிட்டாள்.

அவள் தலை பின்னி முடித்த சமயத்தில் வாசலில் "தபால்!" என்ற சத்தம் கேட்டது. உடனே லலிதா அம்மாவின் பிடியிலிருந்து தலைப் பின்னலைப் பலவந்தமாகத் திமிறி விடுவித்துக் கொண்டு எழுந்தாள்.

"இவ்வளவு வயதாகியும் உன் சுபாவம் மட்டும் மாறவில்லை. அந்த நாளில் திமிறிக்கொண்டு ஓடியது போலவே இப்போதும் ஓடுகிறாய். நல்ல வேளையாகத் தபால் ஆபீஸுக்கே ஓடிப்போகாமல் விட்டு வாசலோடு நிற்கிறாயே, அதுவரையில் விசேஷந்தான்!" என்றாள் சரஸ்வதி அம்மாள். அவளுடைய வார்த்தைகளை அரைகுறையாகக் காதில் வாங்கிக்கொண்டு லலிதா வாசற் பக்கம் சென்றாள்.

## இரண்டாம் அத்தியாயம்

# "சீதா வருகிறாள்!"

**வா**சலில் வந்து நின்று "தபால்!" என்று சத்தமிட்ட போஸ்டுமேன் வயதான மனிதர். அவர் லலிதாவை ஒரு தடவை ஏற இறங்கப் பார்த்து விட்டு, "நீங்கள் தானா, அம்மா, லலிதா பட்டாபிராமன் என்கிறது?" என்று கேட்டார். "ஆமாண்டா, அப்பா!" என்று சொல்லி லலிதா கையை நீட்டினாள். போஸ்டுமேன் கடிதத்தைக் கொடுத்துவிட்டு, இன்னொரு தடவை லலிதாவைக் கோபமாக உற்றுப் பார்த்து விட்டுப் போனார். போகும் போது, "**ஆமாண்டா, அப்பா!** என்ன இருந்தாலும் இவர்களுடைய அகம்பாவம் மட்டும் போகிறதில்லை!" என்று இரைந்து முணுமுணுத்துக் கொண்டே போனார்.

"காலம் மாறிவிட்டது; எல்லாரிடமும் மரியாதையாகப் பேசவேண்டும்!" என்று தன்னுடைய கணவர் அடிக்கடி தனக்குச் சொல்லிக் கொடுத்துக் கொண்டிருந்தும் இப்போது மறந்து விட்டோமே என்று நினைத்து லலிதா சிறிது வெட்கம் அடைந்தாள். கடிதத்தின் மேல் விலாசம் கணவருடைய கையெழுத்திலே இருக்கிறது என்பதைக் கவனித்துவிட்டு ஆவலுடன் உறையைப் பிரித்தாள். அதற்குள்ளே இரண்டு கடிதங்கள் இருந்தன. ஒன்று கணவர் எழுதியிருப்பதுதான்; இன்னொன்று, ஆகா! — சீதாவின் கையெழுத்துப்போல அல்லவா இருக்கிறது? இருக்கட்டும்; முதலில் இவருடைய கடிதத்தைப் படிக்கலாம்:—

"சௌ. லலிதாவுக்கு ஆசீர்வாதம்.

உனக்குக் கடிதம் எழுத ஆரம்பிக்கும்போது, 'என் ஆருயிரே!'



'அன்பின் சிகரமே!' 'காதற் கனி ரசமே!' 'வாழ்வின் துணைவியே!' என்றெல்லாம் எழுதி ஆரம்பிக்க வேண்டுமென்று எண்ணுகிறேன். ஆனால் எழுதும்போது அதெல்லாம் வருவதில்லை. எழுதவும் கை ஓடுவதில்லை. பழைய கர்நாடக பாணியில்தான் ஆரம்பிக்க வேண்டியிருக்கிறது.

இங்கே நான் சௌக்யமாகவும் சௌகரியமாகவும் வந்து சேர்ந்தேன். யாரும் என்னை வழி மறித்து மணிபர்ஸைப் பறிக்கவில்லை. அப்படி யாராவது பறித்திருந்தாலும் அதிகமாக அவர்களுக்கு ஒன்றும் கிடைத்திராது. ஒரு ஆளுக்கு தேவபட்டணத்துக்கு ரயில் சார்ஜும் மேலே ஒன்றரை அணாவுந்தான் கிடைத்திருக்கும். ஏமாந்து போயிருப்பார்கள்!

நல்ல சமயம் பார்த்துச் சமையற்கார அம்மா லீவு வாங்கிக் கொண்டு விட்டாள். நான்தான் இப்போது சமையல் செய்கிறேன். சமையல் 'பஸ்ட் கிளாஸ்' என்று உன் தம்பி கண்டு சர்டிபிகேட் கொடுக்கிறான். நான் இரண்டு வருஷம் ஜெயிலில் இருந்ததில் என்ன பிரயோஜனம் என்று உன் தாயார் உன்னைக் கேட்டுக் கொண்டிருந்தாளே? இதைக் காட்டிலும் என்ன பிரயோஜனம் வேண்டும்? ஜெயிலில் இருந்திராவிடில் சமையல் செய்யக் கற்றுக் கொண்டிருக்க முடியுமா? வீட்டில் நான் சமையற்கட்டிற்குள் வந்தாலே நீங்கள் எல்லாரும் குடி முழுகிப் போனதுபோல் கூச்சல் போடுவீர்களே? போகட்டும்.

'அத்திம்பேருக்கு ஒத்தாசையாயிரு!' என்று நீ கண்டுவிடம் சொல்லி அனுப்பினாயல்லவா? கண்டு எனக்கு மிகவும் ஒத்தாசையாக இருந்து வருகிறான். நேற்றுக் குழம்பை அடுப்பிலே கவிழ்த்து விட்டான்! 'போதும், அப்பா, உன் ஒத்தாசை! நீ சும்மா இருந்தால், அதுவே பெரிய உதவியாயிருக்கும்!' என்று சொன்னேன். கண்டு ஒத்தாசைக்கு வந்துவிடப் போகிறானே என்று எனக்கு இப்போது ஒரே பீதியாயிருக்கிறது.

உன் தாயார் ஒட்டியாணத்தை மறந்து விட்டாளா, இல்லையா? அது தங்க ஒட்டியாணம் அல்ல, — முலாம் பூசிய பித்தளை ஒட்டியாணம் என்பதையும், அதை நான் விற்றுவிடவில்லை,— தானம் கொடுத்தேன் என்பதையும் உன் அம்மாவிடம் சொல்லி விட்டாயா? சொன்னால் ஒரு வேளை அவளுடைய கோபம் இன்னும் அதிகமாகி விடுமோ, என்னமோ? உன் தாயாரின் சமாசாரம் உனக்குத்தான் தெரியும். உசிதப்படி செய்து கொள்.

மாமாவுக்கு இப்போது உடம்பு நன்றாய்ச் சௌகரியமாகியிருக்கும் என்று நம்புகிறேன். அவருக்கு இப்படிப்பட்ட கஷ்டம் வந்ததை நினைத்தால் எனக்குப் பரிதாபமாயிருக்கிறது. நம்முடைய சூரியா சொன்ன யோசனையைக் கேட்டு நடந்திருந்தால் எவ்வளவோ நன்றாயிருந்திருக்கும். இந்த மாதிரியெல்லாம் பொருள் நஷ்டமும் மனக் கஷ்டமும் ஏற்பட்டிருக்குமா? எல்லாம் கடவுளுடைய செயல்!

நீ எப்போது புறப்பட்டு வருவதாக உத்தேசம்? கூடிய சீக்கிரம் வந்துவிடுவது நல்லது. நீ சீக்கிரம் வர வேண்டியதற்கு ஒரு முக்கிய காரணத்தை இத்துடன் இருக்கும் கடிதத்தைப் பார்த்துத் தெரிந்து கொள்வாய்.

உன் பேருக்கு இந்தக் கடிதம் வரவே, ஏதாவது முக்கிய விஷயமாக இருக்கப் போகிறது என்று பிரித்துப் பார்த்தேன். தயவுசெய்து அதற்காக மன்னிக்க வேணும்.

உன் தோழி சீதா உன்னைப் பார்க்க வருவதாகச் சொல்லிப் பயமுறுத்தியிருக்கிறாள் அல்லவா? அவள் வரும்போது நீ இங்கே இல்லாமல் இருந்தால் என்னால் என்ன செய்ய முடியும்? அதைப் பற்றி நினைத்தாலே எனக்குப் பயமாயிருக்கிறது. ஸ்ரீமதி சீதா புது டில்லி முதலான இடங்களில் இருந்து நாகரிக வாழ்க்கைக்குப் பழக்கப்பட்ட



வன். நானோ சுத்தக் கர்நாடக மனிதன். ஆகையால் ஸ்ரீமதி சீதாதேவியை வரவேற்று உபசரிக்கும் விதம் எனக்கு எவ்விதம் தெரியும்?

ஆகையினால் இந்தக் கடிதம் பார்த்தவுடன் அப்பா - அம்மாவிடம் நல்லபடியாகச் சொல்லி விடைபெற்றுக் கொண்டு வந்து சேரவும். சிமாச்சுவய்யர் உன்னைப் பத்திரமாக அழைத்துக் கொண்டு வந்து விடுவதாக வாக்குறுதி கொடுத்திருக்கிறார்.

இங்ஙனம்
**பட்டாபிராமன்.''**

மேற்படி கடிதத்தைப் படித்து வந்தபோது அதில் பல விஷயங்கள் எழுதியிருந்த போதிலும் "சீதா வருகிறாள்!" என்னும் ஒரு விஷயமே லலிதாவின் மனதில் தங்கியது. கணவன் கடிதத்தைப் படித்து முடித்ததும் அடங்கா ஆர்வத்துடன் சீதாவின் கடிதத்தைப் படிக்கத் தொடங்கினாள்.

அப்போது காமரா அறையிலிருந்து "லலிதா!" என்று அப்பா அருமையாக அழைக்கும் குரல் கேட்கவே, லலிதா கடிதத்தைப் படித்த வண்ணமே உள்ளே சென்றாள்.

அவளைப் பார்த்ததும் கிட்டாவய்யர், "லலிதா! எனக்கு ஏதாவது கடிதம் உண்டா? கையில் இரண்டு கடிதம் வைத்திருக்கிறாய் போலிருக்கிறதே! இரண்டும் உனக்கு வந்ததுதானா? யார் கடிதம் எழுதியிருக்கிறார்கள்?" என்று கேட்டார்.

"ஒரு கடிதம் தேவபட்டணத்திலிருந்து இவர் எழுதியிருக்கிறார். இன்னொன்று அத்தங்கா சீதா எழுதிய கடிதம், அப்பா! கல்கத்தாவில் சித்ராவின் வீட்டிலிருந்து எழுதியிருக்கிறாள். சீக்கிரத்தில் அவளுடைய பெண்ணைப் பார்க்க மதராஸுக்கு வருகிறாளாம். அப்படியே தேவபட்டணத்துக்கும் வருவதாக எழுதியிருக்கிறாள் ......"

"ஓகோ! அப்படியா? சீதா கடிதம் எழுதியிருக்கிறாளா? பாவம்! கொஞ்ச நாளாய் அவளைப்பற்றி ஒரு தகவலும் தெரியாமலிருந்தது. அவளை ஒரு தடவை பார்க்க வேண்டும் என்ற சபலம் எனக்குக்கூட உண்டு. அவளைப் பார்த்துச் சில புத்திமதிகள் சொல்ல வேண்டும் என்று இருக்கிறேன். தேவபட்டணத்துக்குச் சீதா வந்தால் இங்கேயும் ஒரு தடவை வரச் செய்கிறாயா, லலிதா! எனக்குத்தான்

இன்னும் ஒரு மாதம் வெளியில் புறப்பட முடியாது போலிருக்கிறது!'' என்றார் கிட்டா வய்யர்.

"ஆகட்டும், அப்பா! வரச்சொல்லிறேன். இப்போது நான் ஊருக்குப் புறப்படலாமா, அப்பா! சீதா வருகிறதாக எழுதியிருக்கிறபடியால் என்னைச் சீக்கிரம் புறப்பட்டு வரச் சொல்லி இவர் எழுதியிருக்கிறார். உங்களை இப்படி விட்டுவிட்டுப் போக எனக்கு மனது கஷ்டமாய்த்தானிருக்கிறது. ஆன போதிலும்......''

"நீ போக வேண்டியதுதான், லலிதா! சீக்கிரம் புறப்பட வேண்டியதுதான். மாப்பிள்ளை இரண்டு வருஷம் ஜெயிலில் இருந்துவிட்டு இப்போதுதான் வந்திருக்கிறார். அவரை எத்தனை நாள் நீ தனியாக விட்டுவிட்டு இருக்க முடியும்? மேலும் சீதாவும் வருகிறதாகச் சொல்லியிருக்கிறபடியால் அவசியம் போகத்தான் வேண்டும். எனக்குக்கூட ஒவ்வொரு சமயம் தேவபட்டணத்துக்கே வந்துவிடலாமா என்று தோன்றுகிறது. இந்த ஊரில் எனக்கு இனிமேல் நிம்மதியாயிராது! எங்கேயாவது போனால்தான் மனம் சாந்தம் அடையும்.''

"அதற்கென்ன, அப்பா! பேஷாக வாருங்கள்! நீங்கள் தேவபட்டணத்துக்கு வருவதற்கு யாரைக் கேட்க வேணும்?—அப்படியானால் நான் நாளைக்குப் புறப்படுகிறேன். இன்றைக்கு அவருக்கு ஒரு பதில் எழுதிவிட்டு வருகிறேன். தபால் ஆபீஸில் தபால் கட்டும் சமயம் ஆகிவிட்டது!''

இவ்விதம் சொல்லிவிட்டு லலிதா உள்ளே போய்க் கடிதம் ஒன்று எழுதத் தொடங்கினாள். அப்போது அவளுடைய செல்வக்குமாரி பட்டுவும் அவளுடைய புத்திரன் பாலசுப்பிரமணியனும் அம்மாவின் அருகில் வந்து உட்கார்ந்து கொண்டார்கள்.

"அம்மா! அப்பாவிடமிருந்து கடிதம் வந்திருக்கிறதா?'' என்று பட்டு மெதுவாகக் கேட்டாள்.

"ஆமாம்; இந்தா! படி!'' என்று லலிதா கடிதத்தை எடுத்துப் பட்டுவிடம் கொடுத்தாள். பட்டு தட்டுத் தடுமாறி அதில் ஒரு வரி படித்துவிட்டு "அப்பா கோணலும் மாணலுமாய்க் கிறுக்கித் தள்ளுகிறார். எனக்குப் புரியவில்லை. இந்த இன்னொரு கடிதம் யார் எழுதியது?'' என்று கேட்டாள்.

"அதுவா? சீதா அத்தங்கா எழுதியது!'' என்றாள் லலிதா.

"சீதா அத்தங்கா என்றால் யார்?'' என்று பட்டு கேட்டாள்.

"சீதா அத்தங்கா என்னுடைய அத்தையின் மகள். ரேழி அறையில் தாத்தா படுத்துக் கொண்டிருக்கிறார், பாரு! அவருக்கு ஒரு தங்கை இருந்தாள். அவள்தான் எனக்கு அத்தை. அவளுடைய பெண் சீதா! சீக்கிரத்தில் உங்கள் இரண்டு பேரையும் பார்ப்பதற்கு வருவதாகச் சொல்லியிருக்கிறாள். அதற்குள்ளே நீங்கள் இரண்டு பேரும் ரொம்ப சமத்தாக ஆகிவிட வேண்டும். நச்சுப் பிச்சு என்று வந்தவர்களை ஏதாவது கேள்வி கேட்டுக்கொண்டே இருக்கக்கூடாது.''

"கேள்வி கேட்டால் சீதா அத்தங்காவுக்குக் கோபம் வந்து விடுமா, அம்மா!'' என்றாள் பட்டு.

"அதெல்லாம் சீதா அத்தங்காவுக்குக் கோபம் என்பதே வராது. உங்களிடம் ரொம்பப் பிரியமாய்ருப்பாள். ஆனாலும் வெறுமனே ஏதாவது கேட்டுக் கொண்டிருக்கக் கூடாது.''

"இல்லை; நான் கேள்வி கேட்கவில்லை, அம்மா! சீதா அத்தங்காவை நான் பார்த்ததே கிடையாதே! எப்படி அம்மா அவள் இருப்பாள்?''

லலிதாவுக்குச் சட்டென்று ஒரு எண்ணம் உதித்தது. பாதி எழுதியிருந்த கடிதத்தை அப்படியே வைத்துவிட்டுக் கூடத்துக் காமரா அறைக்குள் போனாள். அங்கே இருந்த ஒரு பழைய அலமாரியைத் திறந்து அதில் அடைத்து வைத்திருந்த குப்பை கூளங்களில் கையை விட்டுத் தேடினாள். கடைசியாக, ஒரு மங்கிப் போயிருந்த பழைய போட்டோ படத்தை எடுத்துக் கொண்டு வந்தாள். இரண்டு பக்கமும் இரண்டு குழந்தைகள் உட்கார்ந்திருக்க, அந்தப் புகைப் படத்தைக் காட்டி, "இதோ பார்த்தாயா, பட்டு! இதுதான் சீதா அத்தங்கா! இதுதான் நான்! சிறு பிராயத்தில் நாங்கள் இரண்டு பேரும் ரொம்ப சிநேகிதமாயிருந்தோம். எங்களுக்குக் கலியாணம் ஆன சமயத்தில் இந்தப் படம் எடுத்தது. குளத்தங்கரை பங்க-

ளாவுக்குப் போய் அடிக்கடி பேசிக் கொண்டிருப்போம். அதையெல்லாம் நினைத்தால் இப்போது சொப்பனம் மாதிரி இருக்கிறது" என்றாள்.

இந்தச் சமயத்தில் சரஸ்வதி அம்மாள் கிட்டாவய்யருக்குச் சாப்பாடு கொண்டுபோய்க் கொடுத்து விட்டு வந்தாள். வரும்போதே, "ஏண்டி லலிதா! இதென்னடி நான் கேள்விப்படுகிறது? இந்தப் பிராமணர் சொல்லுகிறது நிஜமா? தேவபட்டணத்துக்குச் சீதா வரப் போகிறாளாமே, வாஸ்தவந்தானா?" என்று இரைந்துகொண்டு வந்தாள்.

"ஆமாம், அம்மா! சீதா வருகிறாள்! அதற்காக நீ ஏன் இவ்வளவு இரைச்சல் போடுகிறாய்?" என்றாள் லலிதா.

"நானா இரைச்சல் போடுகிறேன்? அழகாய்த்தானிருக்கிறது. நீ மாத்திரம் என்னிடம் சொல்லாமல் மறைக்கலாமாக்கும்! அந்தத் துக்கிரி இப்போது எதற்காக வருகிறாள்? யார் அவளை வரச் சொன்னார்கள்? அவள் வரவில்லையென்று யார் அழுதார்கள்? லலிதா! நான் சொல்கிறதைக் கேள். இங்கே இப்போது சௌகரியமாயில்லை, ஆகையால் வரவேண்டாம் என்று உடனே கடிதம் எழுதிப் போட்டுவிடு!"

"அம்மா! சீதா இந்த ஊருக்கு — உன் வீட்டுக்கு, வரவில்லை! என்னையும் என் குழந்தைகளையும் பார்க்கத் தேவபட்டணத்துக்குத்தான் அவள் வருகிறாள். நீ எதற்காக வீணாய்ச் சண்டை பிடிக்கிறாய்?"

"அப்படியானால் நான் வேறு, நீ வேறு என்று கேட்கிறேன். நான் உன்னைப் பெற்ற தாயார் இல்லையா? உன்னுடைய குழந்தைகள் என்னுடைய பேரன் பேத்திகள் இல்லையா? ஏன்தான் இப்படி என்னைக் கண்டு கரிக்கிறீர்களோ, தெரியவில்லை..."

"கோபித்துக் கொள்ளாதே, அம்மா! சீதா தேவபட்டணத்துக்கு வந்தால் அவளை அங்கிருந்தே திரும்பி டில்லிக்குப் போகச் சொல்லி விடுகிறேன். இந்த ஊருக்கு அவள் வரவேண்டாம் என்று சொல்லி விடுகிறேன்..."

"ஏன் அப்படி வித்தியாசப் படுத்திப் பேசுகிறாய்? இதுதான் எனக்குப் பிடிக்கிறதேயில்லை."

"உனக்குச் சீதா அத்தங்காளை எப்போதும் பிடிக்கிறது கிடையாது. அதனாலேதான் சொன்னேன்."

"அதனாலேதான் நானும் கேட்கிறேன். எனக்குப் பிடிக்காதவள் உனக்கு மட்டும் எதற்காகப் பிடித்திருக்கவேணும்? நான் சொல்கிறதைக் கேள், லலிதா! அவள் ரொம்பத் துக்கிரி; மனதில் நல்ல எண்ணம் கிடையாது. பாம்புக்குப் பாலைக் கொடுத்தாலும் அது விஷத்தைத்தான் கக்கும். இந்தச் சமயம் தேவபட்டணத்துக்குக் கூட வர வேண்டியதில்லை என்று உடனே எழுதி விடு. இன்றையத் தபாலிலேயே கடிதத்தைச் சேர்த்து விடு. தெரிகிறதா?......"

இந்தச் சமயத்தில் வாசலில் மாட்டு வண்டி வந்து நிற்கும் சத்தம் கேட்டது.

"வண்டிச் சத்தம் கேட்கிறதே! யார் வந்திருப்பார்கள்? நேற்றைக்கு முற்றத்தில் காக்காய் கத்திய போதே எனக்குத் தெரியும், யாராவது விருந்தாளிகள் வந்து நிற்பார்கள் என்று. பட்டு! நீ போய்ப் பாரடி, அம்மா!"

பட்டுவோடு லலிதாவும் எழுந்து வாசற்பக்கம் போனாள். வண்டியிலிருந்து இறங்கியவர்களைப் பார்த்ததும் லலிதாவின் அதிசயமும் மகிழ்ச்சியும் அளவு கடந்து பொங்கின.



"நம்முடைய மந்திரிகள் தேங்காய்க்கு வரி போடுகிறார்களாமே? வரி அமுலுக்கு வருவதற்குள்ளே, 'இந்த மந்திரி சபை நன்றாயிருக்க வேணும்' என்று சாமிப் பிள்ளையாருக்கு நூற்றெட்டுத்தேங்காய் உடைக்கப்போகிறேன்!"

4 வது வாரம்

சென்னை ஸ்டார்...மஹாராணி...ஸயானியில்

அண்ணாவின்
உயரிய....சித்திரம்

எனெஸ்கே பிலிம்ஸ்
உன்னத..தயாரிப்பு







கிருஷ்ணன்
மதுரம்
பானுமதி
சகஸ்ரநாமம்

# நல்லதம்பி



...டைரக்ஷன்...
கிருஷ்ணன் பஞ்சு

ஸ்டூடியோ...
நியூடோன்

BALU BROS

# வட்ட மேஜை

★ **கலைக் களஞ்சியம்**

தமிழ் வளர்ச்சிக் கழகம் மிகுந்த பொருட் செலவில் தயாரித்து வரும் 'கலைக் களஞ்சியம்' இன்னமும் இருக்கும் என்பதற்கு 'ஒரு சோற்றுப் பதமாக' உருவாகியிருக்கும் சிறு பிரசுரத்தைப் பார்த்தேன். பல லட்ச ரூபாயில் பிரமாதமாகத் திட்டமிட்டுத் தயாரிக்கும் இந்த நல்ல முயற்சி பாராட்டுவதற்குரியதே. தமிழில் — இந்திய மொழிகளிலேயே—இதுபோன்ற பெருமுயற்சி முதன் முறையாகத் தொடங்கி யிருப்பது தமிழுக்கும் தமிழருக்கும் தமிழ் நாட்டிற்கும் தனி மதிப்பு அளிக்கக் கூடியது என்பதில் ஐயமில்லை.

முயற்சி எக்காலத்தும் உதவக் கூடியதாய், செலவு செய்யும் பணத்துக்கு உரிய மதிப்பு அளிப்பதாய், கூடியவரை குற்றங் குறைகள் அற்றதா யிருக்க வேண்டும். கீழே குறிப்பிட்டுள்ளவை போன்ற தவறுகள் மாபெரும் முயற்சியான கலைக் களஞ்சியத்திலே இருக்கக்கூடாது.

'கலைக்களஞ்சியம்'மாதிரிப் பிரதியைப் படிக்கும்போது, தமிழ் எழுதத் தெரியாதவர்கள், அல்லது எண்ணத்தை எப்படி எளிதில் எழுத்தாக்குவது என்ற வித்தை கைவராதவர்கள் இவற்றை எழுதி யிருக்கிறார்களோ என்ற ஐயத்தை ஏற்படுத்துகிறது.

'ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்சரிடம் விவேகானந்தர் தம்மை முழுதும் ஒப்படைத்த நிகழ்ச்சியின் அடங்கிக் கிடக்கும் உட்கருத்து யாதெனில், தற்கால இந்தியாவானது முற்கால இந்தியாவின் லட்சியங்களுக்குத் தன்னை ஒப்படைத்தமையே யாகும்' — முதல் பக்கத்தில் காணப்படும் இந்த முதல் வாக்கியம் சிறந்த தலைப் பள்ளிக்கூடத்து ஆங்கிலப்பாதிரியாரின் மொழி பெயர்ப்புப்போல் தொனிக்கிறது.

'ராமன் இபெக்ட்' (பக்கம் 5)—'ராமன் விளைவு' என்று சொன்னால் என்ன கெட்டு விடும்மா தெரியவில்லை! — 'ஒளியானது சதா எனும் ஆகாயத்தில் சிறு சிறு அலைகளாக ஒரு இடத்திலிருந்து மற்றொரு இடத்திற்குச் செல்கிறது!' — இப்படி ஒளியானது என்று எழுதப்பட்டிருப்பதானது அந்தப் பகுதியான திலே ஆறு தடவைகள் வந்துள்ளது. இந்த 'ஆனது' இல்லாமல் தமிழ் எழுத முடியாதா?

சுருங்கக் கூறி விளங்க வைக்கும் மாண்பை மறந்து, கூறியது கூறல் மிகுதியும் தோன்ற விட்டிருக்கிறார்கள். சில உதாரணங்கள்:—

1. 'அப்பொழுது ஒளியானது ஒரே வழியாகத் திரும்பி வராமல் நாலா பக்கங்களிலும் சிதறி அறை முழுவதும் வெளிச்சமாய் விடுகிறது. இப்படி ஒளியானது சிதறுவதையே 'ஒளிச் சிதறல்' என்று கூறுவார்கள்' (பக்கம் 5)

'இப்படி ஒளியானது சிதறுவதையே' என்பதற்குப் பதில் 'இதையே' என்ற வார்த்தையை மட்டும் போட்டிருந்தால் போதாதா?

2. 'சென்னை மாகாணத்தில் பிரபலமாக இருந்து வரும் உயர்தர மாடுகளுள் முக்கியமானவை 1. ஓங்கோல் 2. காங்கேயம் 3. ஹளிக்கர் 4. அமிருத மஹால் என்னும் மாடுகளாகும்.' இது ஒரு வாக்கியம்.

'என்னும் மாடுகள்' என்பதற்குப் பதில் 'என்னும் ஜாதிகள்' என்று போட்டிருந்தால் பொருத்தமாக இருக்குமல்லவா?

3. 'நாட்டு மாடுகள் என்று வழங்கிவரும் மாடுகள் எல்லாம் மேற் சொன்ன ஜாதி மாடுகளால் உண்டான கலப்பு மாடுகளேயாகும்.'

ஒரே வரியில் இத்தனை மாடுகளை அடைக்க வேண்டியது அவசியமா? 'நாட்டு மாடுகள் என்று வழங்கி வருபவை எல்லாம் மேற் சொன்ன ஜாதிகளால் உண்டான கலப்புகளேயாகும்' என்று எழுதினால் என்ன?

4. பறவைகளின் வர்ணங்களைப் பற்றிக் கூறும் பகுதியில் காணப்படுகிறது இது: 'கருந்தரையின் வாழும் உள்ளான் களிமண்போலிருக்கும்.' (பக்கம் 10)

உள்ளானே களிமண்மாதிரி யிருக்குமா, அதன் நிறம் அப்படி இருக்குமா என்ற சந்தேகம் உண்டாகிறது.

5. 'வாத்து 60 மைல் வேகத்தில்' பறக்கும் என்று கலைக் களஞ்சியம் (பக். 9) சொல்லுகிறது. உண்மையாகவா? தமிழ் நாட்டில் உள்ளவர்கள் வாத்து பறப்பதையே பார்த்ததில்லையே! வாத்து என்று கலைக் களஞ்சியம் கூற முயல்வது எந்த இனத்தை? 'நீர்க் கோழி' என்று திருநெல்வேலி ஜில்லாவிலும் 'நீர்க்காகம்' என்று சில இடங்களிலும், பேசப்படுகிற பறவையாக இருக்கலாமோ? ஆங்கிலத்தில் 'ஸ்வான்' என்று சொல்லப்படும் இனத்தைக் குறிக்குமா? எதுவாயிருந்தாலும் தெளிவாகக் குறிப்பிட்டு விடுவது நல்லதல்லவா?

பெரிய சாதனையில் தவறு கண்டு பிடிக்கும் எண்ணத்தோடு நான் இவற்றை எழுதவில்லை. தமிழனின் சிறந்த முயற்சி குறைகளற்றதாய்த் திகழ வேண்டும் என்னும் ஆசையினால் இக் கடிதம் எழுத முன்வந்தேன்.

பல்லாவரம்
10—3—49

எஸ். கிருஷ்ணஸ்வாமி

["கலைக் களஞ்சியம்" மாதிரிப் பிரசுரத்தைக் காகிதம், அச்சு, விஷயங்களின் போக்கு, சித்திர அமைப்பு — ஆகிய இவற்றுக்கே மாதிரியாகக் கொள்ளவேண்டும். மாதிரிப் பிரசுரத்தில் உள்ளதைக் காட்டிலும் புத்தகத்தில் தமிழ் நடை திருத்தமாகவும் சரளமாகவும் அமையும் என்று எதிர்பார்க்கலாம். பலருடைய அபிப்பிராயமும் தெரிய வேண்டும் என்பதற்காகவே மாதிரிப் பிரசுரம் வெளியாகியிருக்கிறது. தமிழன்பர்கள் பலரும் வெளியிட்டுள்ள அபிப்பிராயங்களைக் கலைக் களஞ்சிய ஆசிரியர்கள் கவனித்து உசிதமான யோசனைகளை ஏற்றுக்

## ஸ்ரீநிவாஸ சங்கம், திருவல்லிக்கேணி

மேற்குறித்த சங்கத்தின் ஆதரவில்
நடைபெற்றுவரும்
பெண்களின் ஹிந்தி வகுப்பிற்காக

# "காதம்பரி"

என்னும் ஒரு இனிய தமிழ் நாடகத்தை
சங்கத்தின் மாணவிகள்

**9—4—1949 சனிக்கிழமை**
**மாலை 5-30 மணிக்கு**

## வி. பி. ஹாலில்

நடிப்பார்கள்

யாவரும் தங்களாலான உதவியை
செய்யுமாறு கேட்டுக் கொள்கிறோம்.

டிக்கட் விவரம்:

**ரிஸர்வ்ட் ரூ. 5, 1-ம் வகுப்பு ரூ. 3,**
**2-ம் வகுப்பு ரூ 2.**

டிக்கட் கிடைக்குமிடம்:

**18, துளசிங்க பெருமாள் கோயில் தெரு.**
**திருவல்லிக்கேணி**

---

சொன்னார்கள். 'அறுபது மைல் வேகத்தில் பறக்கும் வாத்து' ஆங்கிலத்தில் 'Wild Duck' என்ற பெயரை உடையது.

—ஆசிரியர்.]

●

## புதிய வரிகள்

மார்ச்சு மீ 6வ. "கல்கி" இதழ் பூராவை யும் ஒரு முறை வாசித்தேன். அதில் 15-வது பக்கத்தில் "வரி வசூல் விஷயம்" என்ற தலைப்பில் வெளியான கார்ட்டூன் சித்திரத்தை மட்டும் இருபது தடவைக்கு மேல் பார்த்திருப் பேன். அதை நம் நிதி மந்திரி நல்ல எண்ணத் துடன் ஒருமுறையாவது பார்த்தால் உடனே எண்ணெய் விதைகள், கரும்பு, மிளகாய், காப்பி, உருளைக்கிழங்கு, மிளகு, மஞ்சள், வாழைப்பழம் முதலிய விளை பொருள்களுக்கு வரி விதிப்பதை ரத்து செய்துவிடுவார்.

ஏழை மக்கள் உபயோகப் படுத்தக் கூடிய அனாவசியமான பொருள்களுக்கு வரி விதிப் பதை விடுத்து. 'ஜவஹர் பீடி', 'சர்தார் பட்டேல் பேக்டரி', 'நேரு மஞ்சு தோசா' 'நேதாஜி பீடி பேக்டரி' 'சுதந்திரக் கொடி பீடி', காந்திஜி மிலிடேரி காபி கிளப்', 'ராஜாஜி டாக்கீஸ்' இந்நமாதிரி தேசியத் தலைவர்களின் பெயர்களையும், தேசியக் கொடியின் சின்னத்தையும் வைத்து நடத்தப்படும் சகல சுயநல ஸ்தாபனங்களி லும் கிடைக்கக் கூடிய உண்மையான லாபங்க ளில் ஒரு பகுதியைச் சர்க்காருக்குக் கொடுத்து விட வேண்டும் எனச் சட்டம் இயற்றி அமுல் நடத்தினால் ஏராளமான பணம் சர்க்காருக்கு சிரமமில்லாமல் கிடைக்கலாம் என்று நான் கருதுகிறேன். அப்படிக் கிடைக்கா விட்டா லும் கூட்டு. பீடி, பார்பர் ஷாப் முதலியவை களில் தலைவர்களின் பெயர்களையும், தேசி யக் கொடியையும் உபயோகிக்காமலாவது விட்டுவிடுவார்கள் அல்லவா?

சின்னப்பநாயக்கன்
பாளையம் 10—3—49 பழனியப்பன்

## சர்தார் - சிங்கம்

மார்ச்சு மீ 6வ. "கல்கி" அட்டைப் படம் மிகவும் நேர்த்தியாக அமைந்துள்ளது. நம் தேசத் தலைவர் சர்தார் வல்லபாய் பட்டேல் அவர்களின் உருவம் மோகனப் புன்னகை யுடன் மிகவும் கவர்ச்சிகரமாய் இருக்கிறது. அவர் உருவத்தைப் பார்த்ததும் என் மனதில் பெருவகை பூத்தது. அவரை நேரில் தரிசிக் கும் பாக்கியம் எனக்குக் கிடைக்கவில்லை யாயினும் "கல்கி" இதழின் அட்டைப்படம் அவர் இன் முகத்தை என் கண்முன் கொண்டு வந்து நிறுத்தியது. அவருடைய முகத்திற் கும் அவர் அமர்ந்திருக்கும் நாற்காலியின் கைபிடியுடைய முனையில் செதுக்கப்பட்ட உள்ள சிங்க முகத்திற்கும் மிகவும் ஒற்றுமை இருக் கிறது. அதில் பொருந்த கருத்து அடங்கியிருக் கிறது. சிங்கத்தைப் போன்ற வைர நெஞ்சம் படைத்த சர்தார் பட்டேல் அவர்கள் நம் நாட்டின் விடுதலைக்காகவும் உயர்வுக்காகவும் எவ்வளவோ தியாகங்கள் செய்திருக்கிறார். எவ்வளவோ துன்பம் அனுபவித்திருக்கிறார். இப்பொழுது தம் உடல்நலத்தையும் பாராது நம் சுதந்திர இந்தியாவை மிகுந்த திறமை யுடன் காப்பாற்றி வருகிறார். அவருடைய அரிய சேவையை இன்னும் பல்லாண்டு காலம் நம் இந்திய நாடு பெற வேண்டும் என்று கடவுளை வேண்டுவோம்.

திருச்சிராப்பள்ளி
10—3—49 என். ஜி. கிருஷ்ணன்

●

## ரேஷன் கடைகள்

சில ரேஷன் கடைகளில் உள்ள அதிகாரிகள் பணத்தின்மீது ஆசை கொண்டு தங்கள் வரு மானத்தை விருத்தி செய்து கொள்கிறார்கள். அதாவது தங்கள் ரேஷன் கடைக்கு வரும் உணவு வகைகளில் சிலவற்றில் தண்ணீரைக் கலந்து ஒரு மூட்டை உணவு தானியத்தை ஒன்றே அரைக்கால் மூட்டையாகச் செய்து சரமாக்கி அதைப் பொது மக்களுக்குக் கொடுப்பர். தண்ணீர் சேர்த்து அதிகமாக்கியா கால் மூட்டையின் உணவு தானியத்தின் விற்பனைத் தொகையைத் தங்கள் பையில் போட்டுக் கொள்வர்.

இன்னும் சிலர் தங்கள் ரேஷன் கடையில் நல்ல உணவு தானியங்கள் வந்திருந்தால் அதில் கொஞ்சம் எடுத்து கறுப்புமார்க்கெட் டில் விற்பனை செய்வர். அல்லது தங்கள் வீட் டில் உபயோகத்தில் வைத்துக்கொள்வர். இத னால் பொது மக்களுக்கு உணவு தானியங்களை சற்றுக் குறைவாகவே கொடுப்பர். ஆகை யால் அவர்கள் ஆத்திரப்பட்டுக் கேட்டு விடுவார்கள் — அளவுப்படி கொடுக்கிறீர்கள் இல்லையா என்று. ஆனால் ரேஷன் கடையில் உள்ள அதிகாரியோ "நாங்கள் அளவுப்படி தான் போடுகிறோம். ஒரு மூட்டை உணவு தானியம் வந்தால் அதில் சில படிகள் எலிகள் தின்று விடுகின்றன. அதற்கு நாங்கள் என்ன செய்ய முடியும்!" என்று சொல்லித் தங்கள் கடமை எடுத்துக்கொண்டு விடுவர்.

இதுபோன்ற காரியங்கள் நடக்காமல் சர்க்கார் தக்க நடவடிக்கைகள் எடுப்பார்கள் என்று எதிர்பார்க்கிறேன்.

மதுரை
9—3—49 டி. ஆர். ராமமூர்த்தி

---

★ வட்ட மேஜைப் பரிசுத் தொகை ரூ. 25-ஐ 'கலைக் களஞ்சியம்' என்ற கடிதம் எழுதிய பல்லாவரம் என். கிருஷ்ணசாமி அவர்களுக்கு அளிக்கப்பட்டது.



## பெரிய செட்
## குறைந்த விலை



Rs. 199

**ARATONE**
**RADIO AC/DC**

6 வால்வுகள் 2 பாண்டுகள் ரூ. 199/-
6 வால்வுகள் 3 பாண்டுகள் ரூ. 230/-
ட்ரை பாட்டரி, 5 வால்வுகள், 2 பாண்டுகள்
(பாட்டரி நீங்கலாக) ரூ. 225/-

*லோகல் வரிகள் இன்றி எந்த ரயில்வே ஸ்டேஷனிலும் மேற்படி விலைக்கு டெலிவரி செய்யப்படும்*

ஸ்பேர் சாமான்களும் கிடைக்கும்

## போடர் டிரேடிங் கம்பெனி லிட்.

(இறக்குமதி இலாகா)

போடர் சேம்பர்ஸ், பார்ஸி பஜார் தெரு
போர்ட், பம்பாய்

தந்தி: 'KONPODAR'

ADVERTS

## நாகபுரி, பெண்கள் சென்ட்ரல் காலேஜ் நிதிக்காக



## ஸ்ரீமதி
## எம். எஸ். சுப்புலக்ஷ்மி

**உதவும் சங்கீதக் கச்சேரி**

| | | |
|---|---|---|
| வரகூர் ஸ்ரீ முத்துசாமி ஐயர் | - | வயலின் |
| ஸ்ரீ எம். எஸ். சக்திவேல் | - | மிருதங்கம் |
| ஆலங்குடி ஸ்ரீ ராமச்சந்திரன் | - | கடம் |

★

**ஞாயிறு 20-3-49 மாலை 6 மணிக்கு**

**நாகபுரி மஹாராஜாபாக் அருகிலுள்ள யுனிவர்ஸிடி மைதானத்தில்**

★

*மத்திய மாகாணம், பீரார் கவர்னர் மேன்மைதங்கிய*
**ஸ்ரீ மங்களதாஸ் பக்வாஸா அவர்கள்**
*தலைமை வகிப்பார்கள்*

டிக்கெட்டுகள்:
ரூ. 250; ரூ. 100; ரூ. 25; ரூ. 10; ரூ. 5.

குறிப்பு:—எட்டு வயதுக்குட்பட்ட குழந்தைகள் அனுமதிக்கப்பட மாட்டார்கள். எட்டு முதல் பனிரெண்டு வயதுள்ள குழந்தைகளுக்குப் பாதி கட்டணம் உண்டு.

# மாந்தருக்குள் ஒரு தெய்வம்

இரண்டாம் பாகம்

ரா.கி.

## 1. லண்டன் மார்க்கம்

தாய்நாட்டுக்குப் போகிற வழியில் லண்டனில் ஸ்ரீ கோகலேயைச் சந்தித்துப் பேசுவதற்காக மகாத்மா காந்தி இங்கிலாந்துக்குப் பயணமானார். அவருடன் ஸ்ரீமதி கஸ்தூரி பாயும் மிஸ்டர் காலன்பாக் என்னும் ஜெர்மன் நண்பரும் பிரயாணப் பட்டார்கள்.

1914-ம் வருஷம் ஜூலை மாதத்தில் மகாத்மா கப்பல் ஏறி ஆகஸ்டு மாதம் 5உ லண்டனை அடைந்தார். அதற்கு முதல் நாள் ஆகஸ்டு மாதம் 4உ முதலாவது உலக மகா யுத்தம் ஆரம்பமாகி விட்டது.

லண்டன் நகரை அடைந்ததும் மகாத்மா ஸ்ரீ கோகலேயைப் பற்றி விசாரித்தார். கோகலே பாரிஸுக்குப் போயிருக்கிறார் என்றும் யுத்தம் தொடங்கி விட்டபடியால் திரும்பி வருவதற்குத் தாமதப்படலாம் என்றும் தெரிந்தது. இந்தியாவில் தாம் செய்யவேண்டிய தேசத் தொண்டைக் குறித்து ஸ்ரீ கோகலேயிடம் மகாத்மா பேச விரும்பினார். கோகலேயைப் பாராமல் இந்தியாவுக்குப் போக விரும்பவில்லை. ஆகையால் அவர் திரும்பி வரும் வரையில் லண்டனிலேயே தங்கி யிருக்கத் தீர்மானித்தார்.

லண்டனிலிருந்தபோது யுத்தம் சம்பந்தமாகத் தம்முடைய கடமை என்னவென்ற யோசனை ஏற்பட்டது. தென்னாப்பிரிக்காவில் போயர் யுத்தத்தின்போது செய்தது போல இந்த யுத்தத்திலும் பிரிட்டனுக்கு உதவி செய்வது இந்தியர்களுடைய கடமை என்று மகாத்மா தீர்மானித்தார். எனவே அச்சமயம் இங்கிலாந்தில் படிப்பதற்காக வந்திருந்த இந்திய மாணவர்களையும் மற்ற இந்தியர்களையும் திரட்டி அவர்களிடம் தமது அபிப்பிராயத்தைத் தெரிவித்தார். "ஆங்கில மாணாக்கர்கள் யுத்த சேவையில் எவ்வளவு ஆர்வத்துடன் ஈடுபடுகிறார்கள், பார்த்தீர்களா? அதுபோல இந்திய மாணாக்கர்களும் யுத்த சேவை செய்வதற்கு முன்வர வேண்டும்" என்று சொன்னார்.

இந்தியர்களில் சிலர் அதை ஆட்சேபித்
ர்கள். "ஆங்கிலேயர் சுதந்திர புருஷர்கள்;
ளும் சாதியினர்; ஆகையால் சாம்ராஜ்
ஜதைக் காப்பாற்றுவதற்காக அவர்கள்
த்தம் செய்தாக வேண்டும். சுதந்திர
லாத அடிமை இந்தியர்கள் எதற்காக
த சேவையில் ஈடுபட வேண்டும்?
கிலேயருக்கு ஏற்பட்டிருக்கும் நெருக்
யை நமக்குச் சாதகமாக உபயோகித்துக்
ள்வதல்லவா நம்முடைய கடமை?"
றார்கள். இந்த வாதத்தை மகாத்மா
புக் கொள்ளவில்லை.

"இங்கிலாந்துக்கு ஏற்பட்டுள்ள கஷ்
தை நம்முடைய சந்தர்ப்பமாக உபயோ
த்துக் கொள்வது நியாயம் அல்ல.
த்தம் நடக்கும் வரையில் நம்முடைய
ரிக்கைகளை வற்புறுத்தக் கூடாது.
ட்டிஷ் சாம்ராஜ்யத்தின் பாதுகாப்பை
ம் பெற்று வருகிறோம். ஆகையால்
த்தில் பிரிட்டனுக்கு உதவி செய்ய
ண்டும்" என்று வற்புறுத்தினார்.

மகாத்மாவின் யோசனையை இந்தியர்கள்
ர் ஒப்புக் கொண்டார்கள். யுத்த
வைக்காக வாலண்டியர் படையில்
ர்வதாகத் தங்கள் பெயர்களையும்
டுத்தார்கள். இவர்களில் இந்தியா
ன் எல்லா மாகாணத்தினரும் எல்லா
த்தினரும் இருந்தார்கள்.

இதனால் திருப்தி யடைந்த மகாத்மா
சமயம் இந்திய மந்திரி பதவி வகித்த
ர்ட் குருவுக்குக் கடிதம் எழுதினார்.
மும் தம்மைச் சேர்ந்த இந்தியர்களும்
ன்ய சேவையில் ஈடுபட விரும்புவ
கவும் அதற்கு வேண்டிய பயிற்சி
றத் தயாரா யிருப்பதாகவும் அந்தக்
த்தில் தெரிவித்தார்.

லார்ட் குரு முதலில் சிறிது தயங்கி
டுப் பிறகு மகாத்மா எழுதிய வண்
ம் இந்தியர்களின் சைன்ய சேவையை
புக்கொள்வதாகப் பதில் எழுதினார்.

முதலில் டாக்டர் காண்ட்லி என்ப
ன் கீழ் பிரதம சிகிச்சை முறையில்
ற்சி அளிக்கப் பட்டது. எண்பது
தியர்கள் பயிற்சி பெற்றார்கள். ஆறு
த்துக்கெல்லாம் நடந்த பரீட்சை
ஒருவரைத் தவிர மற்றவர்கள் எல்
ரும் தேறினார்கள்.

இந்த நாட்களில் காந்திஜிக்குப் பழக்க
ன பல இந்தியர்களில் ஒருவர் டாக்டர்
ராஜ் மேத்தா. அப்போது இவர் இங்கி

லாந்தில் வைத்தியப் பரீட்சைக்குப் படித்துக்
கொண்டிருந்தார். மகாத்மாவின் தலைமையில்
சைன்ய சேவைப் படையில் சேர்ந்தார்.
பிற்காலத்தில் டாக்டர் ஜீவராஜ் மேத்தா
காந்தி மகாத்மாவுக்கு உடல் நோய் ஏற்பட்ட
காலங்களிலும் காந்திஜி உண்ணாவிரதம்
இருந்த காலங்களிலும் அவருடைய நம்பிக்
கைக்கு உரிய வைத்தியராய் விளங்கினார்.
தற்சமயம் டாக்டர் ஜீவராஜ் மேத்தா
பரோடா சமஸ்தான பிரதம மந்திரி பதவி
வகித்துப் பரோடாவைப் பம்பாய் மாகாணத்
தில் சேர்க்கும் பணியில் ஈடுபட்டிருக்கிறார்.

அக்காலத்திலேதான் மகாத்மா காந்தி
முதன் முதலாக ஸ்ரீமதி சரோஜினி தேவி
யையும் சந்தித்தார். போர் வீரர்களுக்கு
உடுப்புக்களும் காயம் பட்டவர்களுக்குக்
கட்டுகள் போடும் துணிகளும் தயாரிக்கும்
வேலையில் ஈடுபட்ட பெண்மணிகளின் சங்கம்
ஒன்று லண்டனில் இருந்தது. அந்தச்
சங்கத்தில் ஸ்ரீமதி சரோஜினி தேவி அங்கத்
தினர். ஒரு சமயம் போர் வீரர்களின்
உடுப்புக்காக வெட்டப் பட்டிருந்த ஒரு குவி
யல் துணிகளை மகாத்மா காந்தியிடம்

---

## புத்தப் புதிது!



வந்தவர்:—என்ன சுவாமிகளே! இன்றைக்குப் புதிதாக என்ன போட்டிருக்கிறது?

சர்வர்:—இந்த மேஜையும் நாற்காலியும் இன்றைக்குப் புத்தப் புதிதாகப் போட்டிருக்கிறது!

ஸ்ரீமதி சரோஜினி தேவி கொடுத்து அவற்றை உடைகளாகத் தைத்துக்கொண்டு வரும்படி சொன்னாராம். மகாத்மா அவ்விதமே தைத்துக் கொடுத்தாராம்.

பிற்காலத்தில் இந்தியாவில் மகாத்மா ஆரம்பித்து நடத்திய இயக்கங்களில் ஸ்ரீமதி சரோஜினி தேவி எவ்வளவு ஆர்வத்துடன் ஈடுபட்டிருந்தார் என்பது அனைவரும் அறிந்த விஷயம். மகாத்மாவிடம் ஸ்ரீமதி சரோஜினி தேவி கொண்டிருந்த பக்தி அளவற்றது. பாதகன் கோட்ஸேயினால் மகாத்மா சுடப்பட்டு இறந்த சம்பவம் ஸ்ரீமதி சரோஜினியின் இருதயத்தைப் பெரிதும் பாதித்துப் பலவீனப் படுத்திவிட்டது. காந்தி மகான் காலமாகி ஒரு வருஷத்துக்கெல்லாம் ஸ்ரீமதி சரோஜினி தேவியும் அவரைத் தொடர்ந்து விண்ணுலகம் சென்றார் அன்றோ?

* * *

பிரதம சிகிச்சையில் பயிற்சி பெற்றுப் பரீட்சையிலும் தேறியவர்களுக்கு இராணுவ டிரில் பயிற்சி அளிக்குமாறு கர்னல் பேக்கர் என்பவர் நியமிக்கப் பட்டார். இவர் தேவைக்கு அதிகமாகவே இந்தியர்கள் மீது அதிகாரம் செலுத்தத் தொடங்கினார். தென்னாப்பிரிக்காவிலிருந்து இங்கிலாந்துக்கு வந்து பாரிஸ்டர் பரீட்சைக்குப் படித்துக் கொண்டிருந்த ஸ்ரீ ஸொராப்ஜி அதாஜானியா என்பவர் இது விஷயமாக மகாத்மாவுக்கு ஆரம்பத்திலேயே எச்சரிக்கை செய்தார். "இந்த அதிகாரி நம்மீது தர்பார் நடத்தப் பார்க்கிறார். அர்த்தமற்ற உத்தரவுகளைப் போடுகிறார். இவர் செலுத்தும் தர்பார் ஒரு புறமிருக்க, இவர் தமக்கு உதவியாக நியமித்துக் கொண்டிருக்கும் ஆங்கில இளைஞர்களும் தங்களை எஜமானர்கள் என்று எண்ணிக் கொண்டு நம்மைக் கேவலமாக நடத்து

கிறார்கள். இந்த அதிகார தடபுடலை எ
னால் பொறுத்துக் கொண்டிருக்க மு
யாது!" என்று சொன்னார்.

ஆயினும் அவரைப் பொறுமையாக இ
கும்படியும் கர்னல் பேக்கரிடம் நம்பிக்
வைக்கும்படியும் காந்தி மகாத்மா கே
டுக் கொண்டார்.

"இப்படித்தான் நீங்கள் நம்பிக்
வைத்து வைத்து ஏமாந்து போகிறீர்க
இதனால் உங்களுக்கும் எங்களுக்கும் க
டத்தைத் தேடித் தருகிறீர்கள்!" என்
அதாஜானியா.

அவர் சொன்னது உண்மை என்று
கிரத்தில் ஏற்பட்டு விட்டது. கர்ன
பேக்கரின் அட்டகாசம் நாளுக்கு நா
அதிகமாகி வந்தது. அவர் 'கார்ப்போர
களாக நியமித்திருந்த ஆக்ஸ்போர்டு மாண
வர்களும் போட்டி போட்டுக்கொண்டு அ
காரம் செலுத்தினார்கள். இந்தியர்களுடை
சுயமரியாதைக்குப் பங்கம் நேரும் நிலை
ஏற்பட்டு விட்டது.

இதன் பேரில் மகாத்மா மேற்படி நிலை
அதிகாரியிடம் போய் இந்தியர்களுடை
கருத்தைத் தெரிவித்தார்.

"என்னிடம் நேரே நீங்கள் வந்து பு
சொல்லக்கூடாது. நான் நியமித்திருக்
'கார்ப்போரல்'களிடம் முதலில் பு
சொல்ல வேண்டும். அதுவும் அவ
களே புகார் சொல்ல வேண்டுமே த
நீங்கள் மற்றவர்களுக்காகப் பே
கூடாது" என்றார் கர்னல் பேக்கர்.

மகாத்மா திடுக்கிட்டார். எனினு
நிதானமாகத் தமது கட்சியை எடுத்துரை
தார். "இந்தியர்களைச் சைனிய சேவை
காகத் திரட்டியவன் நான்தான். ஆகைய

## சென்னை நகரில்....



வர்களுக்காக நான் பேசுவதற்கு அநுமதி கொடுக்க வேண்டும். எங்களுடைய சம்மதம் கேட்காமல் 'கார்ப்போரல்'களை நீங்கள் நியமித்திருக்கிறீர்கள். இது சரியல்ல. அவர்களை அனுப்பிவிட்டு எங்களுக்குள் ளேயே சில படைத் தலைவர்களை நியமிப்பது தான் முறை" என்று கூறினார்.

கர்னல் பேக்கருக்கு மகாத்மாவின் யோசனை பிடிக்கவில்லை. அவருக்குக் கோபம் வந்து விட்டது. "நான் நியமித்த கார்ப்போரல்'களை விலக்க வேண்டும் என்று சொல்கிறீர்? அது இராணுவக் கட்டுப்பாட்டுக்கு விரோதம்!" என்று கடுமையாகப் பேசினார்.

காந்திஜி தமது தென்னாப்பிரிக்கா அநுபவத்தைச் சுட்டிக் காட்டினார். அங்கே இந்தியப் படைக்குத் தாமே தலைவரா யிருந்ததை எடுத்துச் சொன்னார். அது ஒன்றும் கர்னல் பேக்கரின் காதில் ஏறவில்லை.

இதன்பேரில் இந்தியர்கள் கூட்டம் போட்டுச் சைன்ய சேவையிலிருந்து விலகிக் கொள்வது என்று தீர்மானித்தார்கள். இது இராணுவக் கட்டுப்பாட்டுக்கு விரோதமான காரியமாதலால் அதன் பலா பலன்களை மகாத்மா நன்கு எடுத்துச் சொன்னார். இந்த விஷயமாகச் சத்தியாக்கிரஹம் செய்ய வேண்டியிருக்கும் என்றும் இராணுவ தண்டனைக்கு உள்ளாக வேண்டியிருக்கும் என்றும் கூறினார். அதற்கெல்லாம் தாங்கள் தயார் என்று இந்தியர்கள் சொன்னார்கள்.

பின்னர் காந்திஜி தமது வழக்கமான முறையை அநுசரித்து இந்தியா மந்திரி லார்ட் குருவுக்குக் கடிதம் எழுதினார்.

அதற்கு லார்ட் குரு எழுதிய பதில் வழவழ முறையில் அமைந்திருந்தது.

"தென்னாப்பிரிக்கா நிலைமைக்கும் இவ்விடத்து நிலைமைக்கும் வித்தியாசம் உண்டு. படைப் பிரிவுத் தலைவர்களை மேலதிகாரி தான் நியமிக்கவேண்டும். ஆயினும் இனி மேல் படைத் தலைவர்களை நியமிக்கும்போது உங்களைக் கலந்துகொண்டு நியமிக்கும்படி செய்கிறேன்" என்று இந்தியா மந்திரி தெரிவித்திருந்தார்.

இதற்கிடையில் மகாத்மா காந்தி பாரிச வாயுவினால் பீடிக்கப்பட்டுப் படுத்த படுக்கையானார். அவர் படுத்திருந்த சமயத்தில் இந்திய சைன்ய சேவைப் படையில் பிளவு ஏற்பட்டு விட்டது. ஒரு பகுதியினர் அதிகாரிகளுடன் சண்டை போடுவதில் பயனில்லை என்று தீர்மானித்துச் சைன்ய சேவை செய்ய இணங்கினார்கள். அச்சமயத்தில் நெட்லி என்னும் இடத்திற்குக் காயமடைந்த போர்வீரர்கள் ஏராளமாக வந்திருந்தார்கள். அவர்களுக்குச் சேவை புரிய ஆள் தேவையா யிருந்தது. சேவை செய்ய இணங்கிய இந்தியர்கள் அந்த இடத்துக்கு அனுப்பப்பட்டார்கள்.

நோயாகப் படுத்திருந்த காந்திஜியைப் பார்ப்பதற்கு உதவி இந்தியா மந்திரி ராபர்ட்ஸ் பலமுறை வந்தார். சேவைக்குப் போகாமல் பின்தங்கிய இந்தியர்களையும் சேவை செய்யப் போகச் சொல்லும்படி காந்திஜியைக் கேட்டுக் கொண்டார். அவர்களுடைய சுய மரியாதைக்குப் பங்கம் எதுவும் நேராது என்று உறுதி கூறினார். அதன் பேரில் காந்திஜி பின் தங்கியவர்களையும் சேவைக்குப் போகும்படி சொன்னார். அவர்களும் நெட்லிக்குப் போனார்கள். ஆனால் மகாத்மா மட்டும் உடல் நோய் காரணமாகப் போக முடியவில்லை.

....குறாய் படுபாடு!












பட்டணம் பார்க்க வந்திருந்த என் மைத்துனியும் அவளைச் சேர்ந்தவர்களும் அன்று ஊருக்குப் புறப்படத் திட்டம் போட்டிருந்தார்கள். காலையில் நான் காரியாலயத்திற்குப் புறப்பட்டபோது என் மைத்துனி என்னிடம் ஒரு நூறு ரூபாய் நோட்டையும் ஒரு நீண்ட சாமான் பட்டியலையும் கொடுத்து அவற்றை யெல்லாம் வாங்கிக் கொண்டு வரும்படி கேட்டுக்கொண்டாள்.

பட்டியலை ஒருதரம் மேலோட்டமாகப் பார்த்துவிட்டு, "இவ்வளவையும் வாங்கக் குறைந்தது ஒன்றரை மணி நேரமாவது ஆகும். நான் ஆபீஸிலிருந்து ஐந்தரை மணிக்கு முன்னால் வரமுடியாது. இத்தனையையும் வாங்கிக் கொண்டு, பஸ் கிடைத்து வீட்டுக்கு வர மாலை ஏழு ஏழரை மணி யாகிவிடும். நீங்கள் இன்று ஊருக்குப் புறப்பட்டால் போலத்தான்!" என்றேன்.

"இன்றைக்கு ஒருநாள் மாத்திரம் ஒரு மணி முன்னால் வரமுடியாதா?" என்றாள் மைத்துனி.

"நீ இங்கே வந்தது முதல் இதுவரை பன்னிரண்டு 'இன்றைக்கு ஒருநாள் மாத்திரம்' ஆகியிருக்கிறது. இன்று நிச்சயமாக வரமுடியாது; அவ்வளவு வேலையிருக்கிறது.
இதையெல்லாம் வாங்கிக்கொண்டு நாளை
குத்தான் போகலாமே!" என்றேன்.

"அவர் கண்டிப்பாக இன்று புறப்பட
சொல்லி எழுதியிருக்கிறார். நாளை ரயிலடி
கும் வரச் சொல்லி, பதிலும் எழுதியா
விட்டது. எனக்காவது வழி தெரிந்தா
எல்லாம் நானே போய் வாங்கிக்கொண்
வந்துவிடுவேன்" என்றாள் வருத்தத்துடன்

"நீ தனியாகக் கடைக்குப் போக மு
யுமா? நீ புறப்படுகிறேனென்றால் குழந்
குட்டிகளெல்லாம் கூட வருகிறேனென்
புறப்படும். சரி, நீங்கள் எல்லோரும் இங்
உள்ளதை மூட்டை கட்டிக்கொண்டு ர
லடிக்கு வந்துவிடுங்கள். நான் சாமான்
ளுடன் அங்கேயே வந்து டிக்கெட் வாங்
வண்டி ஏற்றி விடுகிறேன்" என்று சொல்
விட்டுப் புறப்பட்டேன்.

என் அவசரத்திற்கேற்றபடி அன்று கா
யாலயத்தில் எதிர்பார்த்ததைவிட அதி
வேலை. தினம் ஐந்தரை மணியானது
வெளியே புறப்பட்டு விடும் மானேஜ
அன்று சோதனைபோல் ஐந்தே முக்காலா
யும் புறப்படுவதாகத் தோன்றவில்லை
நெருப்பின் மேலிருப்பவன்போலத் துடி
துக் கொண்டிருந்துவிட்டுச் சரியாக ஆறடிக்
இரண்டு நிமிஷத்திற்கு வெளியே வந்தேன்

அவசரம் அவசரமாகக் குறளித் தெ
வுக்குப் போய், பட்டணம் மஞ்சள், பட்ட
ணம் பாக்கு முதலியவற்றை வாங்கி
கொண்டு சைனா பஜார் தெருவில் நுழை

தேன். வாசனைப் பாக்குத் தூள், காப்பிக் கொட்டை, செல்லுலாயிடு சீப்பு இரண்டு டஜன், சட்டைகளுக்குக் குத்தும் மடிப்பு ஊசி என்று என்னென்னவோ சாமான்க ளெல்லாம் வாங்கினேன்.

கடைசியாக, செல்லுலாயிடு சீப்புக் கடையில் பேரம் பேசிக்கொண்டு நிற்கும்போது, "நமஸ்காரம், சாமி! சௌக்கியங்களா?" என்ற குரல் கேட்டுத் திரும்பிப் பார்த்தேன்; அமிஞ்சிக்கரை சோமு.

## 2

சோமு சென்னையில் ஒரு கைதேர்ந்த ஜேப்படித் திருடன். அவனை முதல் முதலாகச் சென்னைச் சிறையில் சந்தித்தேன். வேதாரண்யம் உப்புப் போரில் கைதியாகித் தண்டிக்கப்பட்ட என்னைச் சென்னைச் சிறைக்கு அனுப்பிவைத்தார்கள். அங்கே வந்த புதிதில் நான் இதர குற்றவாளிக் கைதிகளுடன் கலக்காமல் ஒதுங்கி யிருந்தேன். சோமு தானாக வந்து என்னுடன் பரிச்சயம் செய்துகொண்டான்.

சிறை பாஷையில் அமிஞ்சிக்கரை சோமு ஒரு 'கருப்புக் குல்லாய்'. அதாவது, திரும்பத் திரும்பச் சிறைக்கு வந்து வந்து போகும் வாடிக்கைக் கைதி. அப்போது அவன் எட்டாவதோ அல்லது ஒன்பதாவது முறையோ சிறைக்கு வந்திருந்தான்; அவனுக்கே கணக்கு நினைவில்லை.

சுமார் நாற்பது வயதிருக்கும். பிஞ்சிலே பழுத்தது என்பார்களே, அந்தமாதிரி முகம். நீண்டகாலச் சிறைவாச அனுபவத்தால் பழுத்த ஒரு புதுமை மனப்பான்மை. இந்த இரண்டு அம்சங்களும்தான் என்னைக் கவர்ந்து அவன் சரித்திரத்தை யறியும் ஆவலைத் தூண்டிவிட்டன.

சோமு ஆதியில் சென்னையின் ஒரு பகுதியான அமிஞ்சிக்கரையில் வசித்தானாம். ஆகையால் அவனுக்கு 'அமிஞ்சிக்கரை சோமு' என்று பெயர் வந்தது.

"முதல் தடவை திருடினதுதான் குற்றம், பாவம் எல்லாம். அதன் பிறகு எனக்குத் திருடுவதைத் தவிர வேறு வழியேயில்லை!" என்று அவன் சொன்னதைக் கேட்கப் பரிதாபமாக இருந்தது.

"விக்கிரமாதித்த ராஜா காடாறு மாசம் நாடாறு மாசம் கடத்தினாராம். நான் ஜெயில் ஒரு வருஷம் மதராஸ் தெரு ஒரு மாசம் கடத்துகிறேன். இங்கிருந்து வெளியே போகிறேன். ஒழுங்காகப் பிழைக்க எனக்கு யாரும் உதவி செய்ய மாட்டார்கள். என்னை நம்பி வேலைகொடுக்கமாட்டார்கள். அதோடு போலீஸ் தொந்தரவு சொல்லி முடியாது. ஒரு தடவை ஒரு பெரிய அதிகாரி வீட்டில் திருட்டுப் போய்விட்டது. போலீஸ்காரர்கள் திருடனைக் கண்டுபிடிக்கா விட்டால் அந்த அதிகாரி சும்மா விடமாட்டார். பெரிய இடங்களையெல்லாம் போட்டுக் குடைந்து விடுவார். அவ்வளவு பெரிய ஆள். அந்தத் திருட்டு என் தலையிலே விடிந்தது.

"அப்போது நான் சிறையிலிருந்து வெளியே வந்து சரியாக எட்டு நாட்கள்கூட ஆகவில்லை. எனக்கு வீடேது, வாசலேது? யானைகவுனிப் பக்கத்தில் ஒரு வீட்டுத் திண்ணையில் படுத்திருந்தேன். காலை ஐந்து மணி இருக்கும். போலீஸ்காரர்கள் வந்து எழுப்பி அழைத்துக்கொண்டு போனார்கள். சேத்துப்பட்டு ரயில்வே ஸ்டேஷன் பக்கத்தில் ஒரு இடத்தில் தோண்டச் சொன்னார்கள். ஒரு தங்கச் சங்கிலி, நாலைந்து பட்டு உடைகள், இரண்டு வெள்ளிப் பாத்திரங்கள் எல்லாம் அடங்கிய ஒரு டிரங்குப் பெட்டி அகப்பட்டது. எனக்குப் பதினெட்டு மாதம் சிறைவாசம் கிடைத்தது" என்று அவனுடைய ஒரு அனுபவத்தைச் சொன்ன போது, எனக்கு ஆத்திரம் ஆத்திரமாக வந்தது.

"நீ வக்கீல் வைத்து உன் கட்சியைச் சொல்லி வாதாடவில்லையா?" என்றேன்.

"என்ன பிரயோஜனம்? வக்கீல் வைக்க என்னிடம் பணம் ஏது? வைத்து என் கட்சியைச் சொன்னாலும் யார் நம்புவார்கள்? வெளியே சோற்றுக்கு 'லாட்டரி' போடுவதைவிட உள்ளே இருப்பதே மேலென்று இருக்கும்போது நான் ஏன் கட்சியாட வேண்டும்?" என்றான் சலிப்புடன்.

"அந்த ஒரு தடவைதான் நிரபராதியான உன்னைக் கெடுத்து விட்டார்கள். மற்றத் தடவைகளில்?" என்று நான் கேட்டபோது, "அப்படி யப்படித்தான்! பின்னே வயிறு பிழைக்க வழி?" என்று வெட்கத்துடன் முகத்தை வேறு பக்கம் திருப்பிக்கொண்டு அவன் பதிலளித்தான்.



சோமுவுக்கு வீடு நுழைவது, ஜேப்பி யடிப்பது, கை வெட்டுவது போன்ற எல்லாவகைத் திருட்டுகளிலும் தேர்ச்சியுண்டு.

கொஞ்சம் வெட்கம் கலந்த பெருமை ததும்பும் குரலில், "நம்ம தொழிலுக்கு நல்ல சுறுசுறுப்பு வேணும். ஜால வித்தைக்காரனின் விரல்களைவிட வேகமாகக் கை புரளணும். எல்லாம் மின்னல் வெட்டுகிற மாதிரித்தான்! அந்த ஒரு நொடிக்குள்ளே உடம்பு மனசெல்லாம் படபடவென்று 'ஆடிக்கொல்லி'ப் போகும். நூற்றுக்குத் தொண்ணூற்றொன்பது தடவைகளில் தப்பி விடுவேன். அந்த ஒரு தடவைகூட நான் பழைய கேடி என்ற பட்டத்தினால்தான் அகப்படுவேனே தவிர நிச்சயமாக என்மேல் குற்றத்தைச் சுமத்த முடியாது" என்று அவன் தன் தொழில் திறமையை வர்ணிக்கும்போது அதை வியக்காமலிருக்க முடியாது.

சோமுவின் நெஞ்சாழத்தில் சில உயர்ந்த தன்மைகள் இருந்ததைக் கண்டேன். முழுக்க முழுக்க மிருகத்தன்மையால் சூழப்பட்டிருப்பவன் இதயத்திலும் உயர்ந்த மனிதத் தன்மை அடங்கிக் கிடக்கிறது. அதைத் தூண்டி விட்டுவிட்டால் அது மிருகத் தன்மையை வென்று அடக்கிவிட முடியும் என்பதில் எனக்கு அதிக நம்பிக்கை. ஆகவே, சோமுவிடம் பொதிந்து கிடந்த உயர்ந்த தன்மைகளைத் தூண்டி விடுவது என் பொறுப்பு என்று நான் தீர்மானித்தேன்.

கொஞ்சம் கொஞ்சமாக அவனிடம் மனிதனின் உயர்ந்த வாழ்வைப் பற்றிப் பேசி அவனுள்ளிருந்த ஒளியைத் தூண்டிவிட முயன்றேன். சோமுவும் ஆவலுடன் அதற்கு இணங்கி வந்தான். அந்தத் தடவை தண்டனைக் காலம் முடிந்து விடுதலையடைந்தால், பட்டினி கிடந்து சாக நேர்ந்தாலும் தன் பாபத் தொழிலைச் செய்வதில்லையென்று அவன் என்னிடம் சத்தியம் செய்து கொடுத்தான்.

சிறையிலிருந்து வெளியில் வந்தவுடன் அவன் என்னை வந்து சந்தித்தான். ஆனால் என்னிடம் எவ்வித உதவியும் பெற்றுக்கொள்ள மறுத்து விட்டான். அதன் பிறகு சென்ற பல வருஷங்களில் நாலைந்து முறைதான் அவனைச் சந்தித்தேன்.

ஒவ்வொரு முறையும் தான் திருந்திவிட்டதாகவும் இனிமேல் பயமில்லையென்றும் அவன் உறுதி கூறிவிட்டுப் போவான்.

## 3

அன்று சோமுவைப் பார்த்தவுடன் என் அவசரம் எல்லாம் மறந்து விட்டது. சிப்புக்காரன் சொன்ன விலையைக் கொடுத்துச் சிப்புகளை வாங்கிப் பையில் போட்டுக் கொண்டு பணப் பையைக் கோட்டுப் பையில் வைத்து விட்டுச் சோமுவிடம் பேசினேன். அவன் சௌக்கியத்தை விசாரித் தறிந்து கொண்டு என் அவசரத்தை விளக்கிச் சொல்லி, இன்னொரு நாள் சாவகாசமாக எங்கள் வீட்டிற்கு வரும்படிச் சொல்லி விடை கொடுத்தேன்.

சோமு என் கையிலிருந்த பைகளைத் தான் தூக்கிக் கொண்டு வருவதாகச் சொன்னான். நான் வேண்டாமென்று சொல்லிவிட்டு இரண்டு கையிலும் இரண்டு கனத்த பைகளுடன் தெருவின் எதிர்ப்புறத்திலிருந்த பழக்கடைக் கட்டிடத்தை நோக்கி நடந்தேன்.

அந்தி வேளை அரை யொளியில் குறுக்கும் நெடுக்குமாக இடைவிடாமல் ஓடிக் கொண்டிருந்த மோட்டார்கள், டிராம் வண்டிகள் முதலியவற்றிலிருந்து தப்பிக் கோலம் போட்டு கடந்து எதிர்ப்புறத்தை யடைந்தேன். என்றுமிருப்பதுபோல அன்றும் தெருவின் இரு பக்கமும் ஜகஜக வென்று ஜனக்கூட்டம் அலைமோதிக் கொண்டிருந்தது.

நான் பழக்கடை அங்காடி எல்லைக்குள் நுழைந்த சமயம் பக்கத்துச் சந்திலிருந்து ஒருவன் வேகமாக ஓடி வந்து என்மேல் பலமாக மோதினான். அந்த அதிர்ச்சியில் என் வலது கையிலிருந்த பை கீழே விழுந்து விட்டது. கோபத்துடன் என்மேல் மோதியவனைத் திரும்பிப் பார்த்தேன். அவன், "பார்க்கல்லீங்க!" என்று குழைந்து சொல்லிக் கொண்டே கீழே விழுந்த பையை எடுத்துக் கொடுக்கக் குனிந்தான். நானும் குனிந்தேன்.

அதே சமயம் என் கோட்டுப் பைக்குள் யாரோ கைவிட்டதை உணர்ந்து அதைத் தடுக்க இடது கையை மூட்டையுடன் உயர்த்தினேன். அதற்குள் அந்தக் கை என் பணப் பையுடன் வெளியேறி விட்டதை யுணர்ந்து, "திருடன்! மணிப்பர்ஸ்...திருடன், திருடன்! பிடியுங்கள்!" என்று கூவினேன்.

என் இடப்புறத்திலிருந்து ஒருவன் வேகமாக ஓடினான். என் கூச்சலைக் கேட்டுத் திரும்பிய யாரோ ஒருவர், "அதோ, போறான்! விடாதே! பிடி, பிடி!" என்று கூவிக் கொண்டே துரத்தினார். வேறு சிலரும் ஓடினார்கள்.

என் கோட்டுப் பையைத் தடவிப் பார்த்தேன். 'மணிப்பர்ஸ்' போய்விட்டது. வெட்-

கத்தினால் வாய்விட்டு அழவில்லை நான்; அப்படியாகி விட்டது எனக்கு.

என் மைத்துனியின் குடும்பம் ரயிலேறுவது அப்புறமிருக்கட்டும். நானே. ரயிலடிக்கு எப்படிப் போய்ச் சேருவது என்று தோன்றவில்லை. ஏனெனில், என்னிடம் ஓரணாக் கூட இல்லை.

திருடனைத் துரத்திக் கொண்டு போனவர்கள் "தப்பி யோடிவிட்டான், ஸார்!" என்ற மங்களச் செய்தியுடன் திரும்பி வந்து என்னைச் சூழ்ந்து கொண்டார்கள்.

"எவ்வளவு பணம் ஸார் இருந்தது?"

"மணிபர்ஸை ஜாக்கிரதையாக வைத்துக் கொள்ள வேண்டாமோ?"

"ஸார், பேசாமப் போய்ப் போலீசுலே 'கம்ளயிண்டு' கொடுங்க!"

இவ்வாறு கேள்விகளையும் யோசனைகளையும் அள்ளி யெறிந்து அவர்கள் என்னைத் திணற அடித்தார்கள். அவர்களுடைய யோசனைகளெல்லாம் என்னை ரயிலடிக்குக் கொண்டு சேர்க்குமா?

'என்ன செய்வது? யாரிடம் போய்க் கேட்பது?' என்று யோசித்துக் கொண்டு நின்றேன். மற்றவர்கள் தங்கள் அனுதாபத்தை யெல்லாம் செலவு செய்து விட்டுக் கலைய ஆரம்பித்தார்கள். யாரோ கீழே விழுந்து கிடந்த பையை எடுப்பதைக் கண்டு அதுவும் போய்விடப் போகிறதே யென்று திரும்பிப் பார்த்தேன்.

அமிஞ்சிக்கரை சோமு பையை எடுத்துக் கொண்டு என்னிடம் வந்தான். கண்ணீர் ததும்பும் குரலில், "சோமு! என் பணப் பையை அடித்து விட்டார்களே!" என்றேன்.

சோமு, "தெரியும், வாங்க! ரயிலுக்குப் போக வேண்டு மென்றீர்களே, நேரமாகுது!" என்று அழைத்தான்.

நல்ல வேளையாக எழும்பூர் போக வழி செய்யச் சோமுவாவது வந்தானே என்ற திருப்தியுடன் அவனுடன் பஸ் நிற்குமிடத்திற்குப் போனேன். அங்கே போனவுடன் பையைக் கீழே வைத்து விட்டுத் தன் மடியிலிருந்து என் மணிப்பர்ஸை எடுத்து என்னிடம் கொடுத்தான்.

அளவு கடந்த ஆச்சரியத்துடன், "அகப்பட்டு விட்டதா? நீயே திருடனைத் துரத்திக் கொண்டு போய்ப் பிடித்தாயா?" என்றேன்.

"இல்லே; நானேதான் திருடினேன்!"

"நீயே திருடினாயா? நிஜமாகவா?"

"ஆமாங்க; நீங்க செப்பு வாங்கிக்கிட்டிருக்கிறப்போ ஒங்களை ரெண்டு பேரு 'டாவு' கட்டறதைப் பார்த்தேன். அவனுக யாருன்னு எனக்குத் தெரியும்; நான் யாருன்னு அவன்களுக்குத் தெரியாது. நீங்க எங்கிட்டப் பழம் வாங்கிக்கிட்டுப் போகணும்னு சொன்னீங்களா, இல்லையா? அவனுக ரெண்டு பேரும் அந்த எடத்துக்குப் போயிட்டானுங்க. ஒங்களை உசார்ப்படுத்தினுக்கூடப் போதாதுன்னு நெனைச்சேன். ஒங்ககிட்டப் பேசிட்டுத் திரும்பறப்போ நானே பர்ஸை எடுத்துக்கிட்டுப் போய்க் கொஞ்சம் தள்ளி நின்னு வேடிக்கை பார்த்துக்கிட்டிருந்தேன்" என்றான் அவன் தன்னுடைய பட்டணம் பாஷையில்.

சோமுவை நான் புகழ ஆரம்பித்தேன். அதற்குள் பஸ் வந்து விட்டது.

சோமு, "பாம்பக் கால் பாம்புக்குத் தானுங்களே தெரியும்? நாளைக்கு வீட்டிலே வந்து பார்க்கிறேன். போய் வாரீங்களா?" என்று சொல்லி என்னுடைய சாமான்களை 'பஸ்'ஸில் எடுத்து வைத்தான்.

---



கணவன் :—இப்போது நம் மாப்பிள்ளைக்கு மாசம் ரூபாய் ஐம்பத்தைந்து வருமானம்!

மனைவி :—நாம் மாப்பிள்ளைக்குச் சீராகக் கொடுத்திருக்கும் வீட்டு வாடகையையும் சேர்த்துக் கொண்டா?

கணவன் :—அந்த ஐம்பத்தைந்து ரூபாயை சேர்த்துக்கொண்டுதான் சொன்னேன்!

# பிடிவாதம் நிறைவேறியது

**ரஜனி**

கொழும்பு, மார்ச். 5

இலங்கை சர்க்காரின் பிடிவாதம் நிறைவேறிவிட்டது. இலங்கை இந்தியர் பிரஜா உரிமை மசோதா செனெட் சபையில் நிறைவேறி, கவர்னர் ஜெனரலின் சம்மதத்தைப் பெற்றுச் சட்டமாக்கப்பட்டு விட்டது. இனி இந்தச் சட்டத்தின் ஷரத்துகள் எந்தத் தேதியிலிருந்து அமுலுக்குக் கொண்டு வரப்படும் என்பதுதான் கேள்வி. இதற்கு ஒரு தனி காரியாலயத்தை ஏற்படுத்தி அதற்கு அதிகாரிகளையும் சிப்பந்திகளையும் நியமித்தாக வேண்டும். பலமாதிரி தஸ்தாவேஜுகளைப் பல்லாயிரக்கணக்கில் அச்சிட்டாகவேண்டும். இவ்வளவும் மே மாதம் முதல் தேதிக்குள் முடிந்து அன்று முதல் இலங்கையாகிறவர்களைப் பதிவு செய்து கொள்ள ஆரம்பித்து விடுவார்களென்று எதிர்பார்க்கப் படுகிறது. சட்டம் அமுலுக்கு வந்த பின் இந்தியாவுக்குப் போகிறவர்கள் இலங்கைக்குத் திரும்பி வருவதற்கு அனுமதிக்கப்படுவார்களா? இது தான் பெரும்பாலான இந்தியர்களுக்கு இன்று கவலையைக் கொடுத்து வரும் விஷயம்.

சட்டத்தின் பிரகாரம் சட்டம் அமுலுக்கு வரும் தேதிக்கு முன் ஐந்து வருட காலம் இலங்கையில் இருந்தவர்களுக்கு மட்டுமே இந் நாட்டின் தற்காலிக வாசி என்ற சர்டிபிகேட் கொடுக்கப்படும். இவர்கள் ரஜாவில் இந்தியா போய்வரத் தடையிருக்காது. ஐந்து வருடங்களுக்குக் குறைவாக வசித்தவர்கள் இந்தியாவுக்குச் சென்றால் இலங்கைக்குத் திரும்பலாகாதென்று தடை செய்யப் படலாம். அந்த அதிகாரம் அரசாங்கத்துக்கு இருக்கிறது. அதே சமயம் இலங்கைக்குப் புதிதாக வந்தவர்களாயிருந்தால் கூட, அவர்களாக வலுவில் இந்தியாவுக்குத் திரும்பாமலிருந்தால் நாடு கடத்தும் எண்ணம் அரசாங்கத்துக்கு இல்லை. எனவே இங்கிருப்பவர்கள் கட்டாயத்தின் பேரில் வெளியேற்றப்படுவோமோ என்று கவலைப் படத் தேவையில்லை. இலங்கைப் பிரஜையாக விரும்புவோர், சட்டம் அமுலுக்கு வந்த ஒரு வருடத்துக்குள் பதிவு செய்து கொண்டு விடலாம். தவறினால் பிறகு எக்காலத்திலும் இலங்கைப் பிரஜையாக முடியாது.

இலங்கையின் உள்நாட்டுக் கைத்தொழில்களைப் பாதுகாத்து வளர்க்க இந் நாட்டின் சரித்திரத்திலேயே முதலாவது முறையாக ஒரு முக்கியமான மசோதாவை மந்திரி ஸ்ரீ ஜி. ஜி. பொன்னம்பலம் பார்லிமெண்டில் கொண்டு வந்திருக்கிறார். வெளி நாட்டுச் சாமான்களை இறக்குமதி செய்பவர்கள் அதே சாமான் இலங்கையில் உற்பத்தியாவதாயிருந்தால், அதிலும் ஒரு விகிதாசாரத்தைக் கட்டாயமாக வாங்கி விற்கச் செய்வதுதான் மசோதாவின் இலட்சியம்.

இலங்கையிலுள்ள 'சுதேசி இண்டஸ்ட்ரியல் ஒர்க்ஸ்' என்ற பிரபல கைத்தொழில் ஸ்தாபனத்தின் தலைவரும் இந்தியருமான ஸ்ரீ எஸ். எம். நாயகம் சொல்லுவதைப் போல உள்நாட்டுச் சாமான்களை வாங்குமாறு கட்டாயப் படுத்தும் அரசாங்கம் அந்தச் சாமான்கள் உயர்ந்த ரகமுடையவைகளாக இருக்கும்படிக் கவனித்துக் கொள்ளவும் கடமைப்பட்டிருக்கிறது. இல்லாத பட்சத்தில் பொது ஜனங்களின் நலன் பாதிக்கப் படும். சுதேசியமென்ற பெயரில் பொது ஜனங்களின் பணத்தை ஒரு சில முதலாளிமார்களுக்கு வாங்கிக் கொடுக்கவே மசோதா உதவி புரிவதா யிருக்கும்.




தகப்பனார் :— நம்ம ராஜம்மாள் 'காணக் கண் கோடி' எவ்வளவு நன்றாய்ப் பாடுகிறாள் பார்த்தீர்களா?

கேட்பவர் :—அபாரம்! பாட்டைக் கேட்பதற்குக் கோடி காது வேண்டும்!




# மிகவும் ருசிகரமானது மாத்திரமல்ல- இது நல்லது

**புஷ்டியளிக்கும் பதார்த்தங்கள் நிறைந்தது!**

போர்ன்-விடாவில் 95 சதவிகிதம் எலும்பு வளர்ச்சிக்கும் ஜீவசக்தி யளிப்பதற்குமான சரக்குகள் இருக்கின்றன. தவிர அது ருசியாகவும் ஜீர்ணத்துக்கு தூண்டுகோலாகவும், எளிதில் ரத்தத்துடன் சேர்ந்து புஷ்டிதருவதாகவும் இருப்பதால் குறிப்பாக கர்ப்பிணிகளுக்கும் வியாதிக்குப்பின் குணமடையும் தருவாயிலும் இன்றியமையாத உணவாக விளங்குகின்றது.

## காட்பரீஸ்

# போர்ன்-வீடா

கால்ஷியம் விடமின்கள் நிறைந்தது

**காட்பரி என்பது சிறந்த ரகத்துக்கு அறிகுறி**

# என் கனவு

துருவன்

**எ**த்தனையோ பேர் எத்தனையோ விதமான கனவுகளை யெல்லாம் கண்டிருக்கிறார்கள். எல்லோருக்குமே கனவுகள் பலித்து வாழ்க்கையில் நனவாகி விடுகின்றனவா?

நான் ஒரு கதை வாசித்திருக்கிறேன்: உஷை என்றொரு ராஜகுமாரத்தி இருந்தாள்; அவளது கனவில் ஒரு ராஜகுமாரன் தோன்றினான். அவனையே கலியாணம் செய்து கொள்வேனென்று அந்த அசட்டுப் பெண் பிரதிக்ஞை செய்து கொண்டாள். அந்த ராஜகுமாரன் சாட்சாத் கிருஷ்ண பரமாத்மாவின் பேரப் பிள்ளையாகி விட்டான். பிறகு விதி வசத்தால் அவளது விரதம் நிறைவேறியும் விட்டது.'

இப்படியெல்லாம் புராணங்களிலும், கதைகளிலும் வேண்டுமானால் நடக்கும். நடைமுறை வாழ்க்கையிலும் நடக்குமானால்......?

என் பெற்றோருக்கு நான் ஒரே பெண் என்பதில் செல்லம்தான். ஆனால், உலகத்திற்கு அதைப் பற்றி என்ன அக்கறை இருக்க முடியும்? என்னுடன் படித்த பெண்களும், பழகினவர்களும் என்னை அடித்தால்கூட எனக்கு அவ்வளவாக மனக் குறை ஏற்படாது. என்னைப் பார்த்துப் பரிகசிப்பதையும் கேலி செய்வதையும்தான் என்னால் பொறுக்க முடியவில்லை. யாரிடம்தான் நான் இதைச் சொல்லி ஆற்றிக் கொள்வது?

ஒரு நாள்—இப்படித்தான்—கோடியகத்து மாமி அம்மாவிடம் பேசிக் கொண்டிருந்தாள். அது என் பேச்சுத்தான். நான் அங்கே இல்லையென்று நினைத்தாளோ—இல்லை, இருந்தும் எனக்கென்ன தெரியப்போகிறது என்றுதான் எண்ணிக் கொண்டாளோ — அவளது பேச்சு பிரமாதமாகத்தானிருந்தது.

முடிவில், "அவளுக்கென்னடி, ரோஜாப் புஷ்பம் போல மூக்கும் விழியுமா! அவளைப் போலப் பெண் இந்தக் காலத்துப் பிள்ளைகளுக்குக் கிடைத்தால் போதாதா?" என்றாள். இதை என்னால் நன்றாகப் புரிந்து கொள்ள முடிந்தது.

இது நல்லதோ, கபடம் நிறைந்ததோ என்னால் தீர்மானிக்க முடியவில்லை. துக்கம்தான் நெஞ்சை யடைத்துக் கொண்டது. காமிரா உள்ளின் ஜன்னல்களைச் சாத்திவிட்டு மெத்தை மீது சாய்ந்து கொண்டிருந்தேன். சிறிது நேரத்திற்குள்ளாகவே தலையணையின் ஒரு பாகம் முழுவதும் நனைந்து விட்டதை உணர்ந்தேன். அப்புறம் என் கண்கள் எப்பொழுது மூடிக் கொண்டனவோ எனக்குத் தெரியவில்லை.

## 2

**வ**ழக்கம்போல் புழக்கடைப் பக்கத்தில் சரக்கொன்றை மரத்தின் கீழே உட்கார்ந்திருந்தேன். மேலே சரம் சரமாகத் தொங்கிக் கொண்டிருந்த பூக்கள் எனக்கு மிதமிஞ்சிய ஆவலைக் கிளப்பிற்று. அவைகளோ எட்டாத உயரத்தில் இருந்தன. சற்று நேரம் யோசித்தேன். வேலி ஓரத்திலிருந்த நீண்ட முள்ளை யெடுத்துக் கொண்டு ஒவ்வொரு சரமாகக் கொய்ய ஆரம்பித்தேன். இன்னும் உயரத்தில் இருந்த பெரிய சரமொன்று என் ஆவலை அதிகப்படுத்திவிட்டது. கை முள்ளின் நீளமோ போதவில்லை. மெதுவாகக் கொஞ்ச தூரம் — குருட்டுத் தைரியத்துடன் மரத்தின்மீது ஏறியும் விட்டேன். முள்ளை மாட்டி வேகமாக இழுத்தேன். மறுகணம் என் கால்கள் வழுக்கிவிட்டன.

"ஐயோ!" என்று அலறிக்கொண்டே விழுந்தேன். ஆனால் யாருடைய கைகளோ என்னை அப்படியே தாங்கிக் கொண்டு விட்டன. அந்த அறுபட்ட சரக்கொன்றை அப்படியே மாலைபோல் அவரது கழுத்தில் விழுந்தது!

'கலகல' வென்ற வெண்கலத் தொனியுடன் நகைத்தார் அந்த மனிதர்.

என் கண்கள் சுழன்றன. இதென்ன இது? இவர் யார்? எப்படி வந்தார்? இந்த நிலையில் யாராவது பார்த்தால்...?

"ஏதாவது அடி பட்டதா, லக்ஷ்மி?"

என்னைத் தூக்கி வாரிப் போட்டது. முன் பின்னறியாத அவருக்கு என் பெயர் எப்படித் தெரிந்தது?

"இல்லை......" என்று நான் சொன்னபோது அச்சம், நாணத்தைவிட ஆச்சரியம்தான் மிகுந்திருந்தது.

"லக்ஷ்மி, சரக்கொன்றை யென்றால் எனக்கு ரொம்பப் பிரியம்; இதை நானே எடுத்துக் கொள்ளப் போகிறேன்!" என்றார் அவர்.

"முடியாது; நான்தான் எடுத்துக் கொள்வேன்" என்றேன்.

"நீதானே வலுவில் இதை என் கழுத்தில் போட்டாய்?" என்று கூறிவிட்டு மீண்டும் அவர் சிரித்தார்!

அவரது விஷம விழிகள் என் கண்களை என்னதான் செய்தனவோ! அடுத்த கணம், "நான் பெண்; அதிலும்......" என்ற நினைப்பு என்னை அங்கிருந்து துரத்திவிட்டது. நான் ஓடினேன்; அவரும் என்னைப் பின்பற்றி ஓடிவந்தார்......

அதற்கடுத்த கணம் — 'ஜில்'ரென்ற தலையணை என்னை எழுப்பிவிட்டது!

இதென்ன கனவு! இப்படி யெல்லாம் வாழ்க்கையில் நடைபெறுமா? உண்மையில் மனிதர்களின் கனவுகள் பலிப்பதாயிருந்தால் — அப்புறம் — நமக்கு 'மனிதர்கள்' என்ற பெயர் எதற்கு? கிருதயுகத்திலும், துவாபரயுகத்திலும் இருந்த ஆதர்ச புருஷர்களின் வாழ்க்கையில் வேண்டுமானால் எல்லாம் நடக்கும்!

## 3

பங்குனி மாதம். கோடையின் வெட்கை தாங்க முடியாமல் நாற்காலியை எடுத்து முற்றத்துப் பந்தலில் போட்டுக் கொண்டு சுவாரஸ்யமாக நூல் சவுக்கம் பின்னிக் கொண்டிருந்தேன். மனம் மாத்திரம் எதையோ எண்ணி இயங்கிக் கொண்டிருந்தது.

ஒரு நாளும் கண்டறியாத எங்கள் வீட்டு வாசற் பக்கம் பச்சைக் கார் ஒன்று வந்து நின்றது. அப்பா யாரோ இரண்டு பேர்களுடன் காரிலிருந்து இறங்கிக் கொண்டிருந்தார். நான் எழுந்து கூடத்துப் பக்கம் சென்றேன்.

அவர்கள் என்ன பேசிக் கொண்டார்களோ, எனக்குத் தெரியவில்லை. அம்மா பரபரப்புடன் என் உடையிலும், நகைகளிலும் அதிகக் கவனம் செலுத்தி என்னைத் துரிதப் படுத்திக் கொண்டிருந்தாள். எல்லா ஒத்திகைகளும் ஆனபின் கையில் வெற்றிலைத் தாம்பாளத்தைக் கொடுத்துக் கூடத்துப் பக்கம் போகச் செய்தாள்.

என் மனம் எதையோ நினைத்துப் புழுங்குவதும் ஏங்குவதுமாக இருந்தது. அப்பொழுது என்ன செய்தேன் என்பதுகூட எனக்கு இப்பொழுது ஞாபகமில்லை — குனிந்து ஒரு நமஸ்காரம் செய்து விட்டுத் தலை நிமிர்ந்தேன்......

ஆஹா! என் கண்களை ஒரு தரம் கசக்கிக் கொண்டேன். பாழும் சந்தேகம் வேறு தண்டனையைக் கொடுத்துக் கொண்டேயிருந்தது.

அந்தக் குறுகுறுப்பான விஷம விழிகள்—நெற்றியின் முன் பக்கம் சரிந்திருந்த அழகான கிராப்பு—இடது புறத்தின் ஓரத்தில் இருந்த பச்சையான மச்சம்—'இது மீண்டும் கண்ட கனவல்ல, நனவுதான்' என்பதை உணர்வதற்குச் சிறிது நேரம் பிடிக்கத்தான் செய்தது.

கலகலப்பான எனது வாழ்க்கைப் பிரயாணத்தின் தொடக்கத்திற்கு எல்லோரும் வந்திருந்தார்கள். என் கணவர் என் கைகளைப் பிடித்துக் கொண்டு அக்கினியைச் சுற்றி வரும்போது என் உள்ளம் கர்வத்தினால் பூரித்தது.

"நான் கனவு கண்டேன்—அதில் வந்தவரையே நான் மணந்து கொண்டேனடி!

"உங்களை எனக்கு நன்றாகத் தெரியும்: என் கனவில் வந்து கொன்றைச் சரத்திற்காகத் துரத்தினீர்களே, அதற்குள்ளாகவா இவ்வளவு மறதி? நீங்கள் விரும்பும் கொன்றைச் சரம் ஒன்றென்ன, மரம் முழுவதையுமே பறித்து வருகிறேனே!"

இப்படி யெல்லாம் கூற வேண்டுமென்று ஒவ்வொரு கணமும் என் உள்ளம் துடித்துக் கொண்டிருக்கிறது. ஆனால் கனவின்படியே நனவும் என்பதை இந்தக் காலத்தில் யார் நம்புவார்கள்? ஊமைப் பெண்ணின் கனவு அவளது அந்தரங்கத்திலேயே ஒளிர வேண்டியதுதானே?




COIMBATORE

# இரண்டு திருடர்கள்

**விஜயம்**

"ஊரிலிருந்து தந்தி வந்திருக்கிறது: என் அண்ணாவுக்கு உடம்பு சரியில்லை. நான் உடனே புறப்பட வேண்டும். நீ கொஞ்சம் என் வீட்டைப் பார்த்துக்கொள்; நான் அதிக நாள் அங்கே தங்கமாட்டேன்!" என்று பூனை தன்னுடைய நண்பனான குரங்கினிடம் சொல்லிவிட்டு, அவசரம் அவசரமாக ஊருக்குப் புறப்பட்டது.

குரங்கு, பூனையின் வீட்டை ஜாக்கிரதையாகப் பார்த்துக் கொள்ளுவதாகத் தைரியம் சொல்லி அதை அனுப்பியது.

அன்று சாயங்காலம் வழக்கம்போல் குரங்கு காடெல்லாம் சுற்றிவிட்டு வீட்டுக்கு வந்தது. இராத்திரி ஆகாரம் முடிந்ததும் மனைவியோடு பேசிக்கொண்டிருந்தது. அப்பொழுது இராத்திரி மணி பத்து இருக்கும். குரங்குக்குச் சட்டென்று பூனை ஊருக்குப் போன சமாசாரம் ஞாபகத்துக்கு வந்தது. அதன் வீட்டுப் பக்கம் ஒரு முறை போய் வரலாம் என்று நினைத்து, அது கையில் 'டார்ச் லைட்'டுடன் புறப்பட்டது; குறுக்கு வழியாகப் போய், பூனையின் வீட்டுப் புழக்கடைப் பக்கம் சென்று பார்த்தது.

என்ன ஆச்சரியம்! குரங்கு புழக்கடைக் கதவைத் தொட்டதும் அது தானாகவே திறந்து கொண்டது. உடனே குரங்கு மடமட வென்று உள்ளே நுழையவில்லை. ஏன் தெரியுமா? யாராவது திருடன் உள்ளே புகுந்திருந்தால் அதற்கு உதை யல்லவா கிடைக்கும்?

மெதுவாக அடிமேல் அடி வைத்துக் குரங்கு இருட்டில் தடுமாறிக் கொண்டே ஓர் அறைக்குள் நுழைந்துவிட்டது. கையில் இருக்கும் 'டார்ச் லைட்'டை உபயோகிக்கலாமே என்றால், திருடன் வெளிச்சத்தைக் கண்டு விட்டால் குரங்கை உயிரோடு விட மாட்டானே!

குரங்கு நுழைந்த அறை சமையலறையாகத்தான் இருக்க வேண்டும். ஏனென்றால் குரங்கு நின்ற இடத்துக்குச் சமீபமாக ஏதோ ஒரு பாத்திரம் 'டணார்' என்ற சத்தத்துடன் கீழே விழுந்தது. குரங்குக்குப் பயமிகுதியினால் மூச்சே நின்று விடும் போலாகிவிட்டது. இருந்தாலும் ஒருவாறு சமாளித்துக்கொண்டு டார்ச் லைட்டின் பொத்தானை அமுக்க வேண்டும் என்று குரங்கு நினைத்தது. ஆனால் அதன் கை வேலை செய்தால்தானே!



அடுத்த விநாடி குரங்கின் மேல் ஏதோ ஒரு உருவம் குபீர் என்று பாய்ந்தது. குரங்கு தைரியத்தை வரவழைத்துக்கொண்டு அந்த எதிரியைத் தாக்கிற்று. இரண்டு நிமிஷம் கூடச் சண்டை நடக்கவில்லை. அதற்குள் குரங்கின் கையிலிருந்த 'டார்ச் லைட்' 'கடக்' என்று கீழே விழுந்தது. அது கீழே விழுந்ததோ இல்லையோ, அந்த எதிரி அதை 'லபக்' என்று வாயில் கௌவிக்கொண்டது. அடுத்த நிமிஷம் பளீர் என்று அந்த அறை முழுவதும் ஒளி வீசியது. அவ்வளவுதான்; குரங்குக்கு எதிர்த்தாற் போல் அதனுடைய இன்னொரு நண்பனான கரடி நின்று கொண்டிருந்தது.

"அடே, குரங்கா! என்ன அப்பா! இந்த

வெளியில் எங்கே வந்தாய்?'' என்று கரடி ஆச்சரியத்துடன் கேட்டது.

அதே சமயத்தில், "அடே, கரடியா! நீ எங்கே இந்தச் சமயத்தில் இங்கே வந்தாய்?'' என்று பதிலுக்குக் குரங்கு கேட்டது.

"பூனை ஊருக்குப் போகும்போது வீட்டைப் பார்த்துக் கொள்ளச் சொல்லி விட்டுப் போயிற்று. அதற்காகத்தான் வந்தேன்!'' என்றது கரடி.

"என்னிடமும் பூனை வீட்டைப் பார்த்துக் கொள்ளச் சொல்லி விட்டுப் போயிற்று. அதுதான் இப்படி வந்தேன்!'' என்று சொல்லிவிட்டுக் குரங்கு சிரித்தது.

"அந்தப் பொல்லாத பூனை இன்னும் யாரிடமெல்லாம் வீட்டைப் பார்த்துக் கொள்ளச் சொல்லி யிருக்கிறதோ? அவர்களெல்லாம் இங்கே வந்து சேர்ந்து, ஒருவரை யொருவர் 'திருடன்' என்று நினைத்துச் சண்டையிடுவதற்குள்ளே நாம் வெளியேறி விடவேண்டும்!'' என்று கரடி சொல்லவே, குரங்கும் அதற்குச் சம்மதித்து அதைப் பின் தொடர்ந்தது.

மறு நாள் காலை குரங்குக்குப் பூனையிடமிருந்து ஒரு கடிதம் வந்தது.

**நண்பரே,**

**அன்றைவுக்கு உடம்பு குணம். இன்னும் ஒரு வாரத்தில் நான் அங்கே வந்து விடுவேன். ஒரு விஷயம்; நாங்கள் புறப்பட்டு வரும் அவசரத்தில் புழக்கடைக் கதவைச் சாத்தித் தாளிடாமல் வந்து விட்டோம். நீங்கள் சாத்திப் பூட்டி யிருப்பீர்கள் என்று நினைக்கிறேன். சிரமத்துக்கு மன்னிக்கவும்.**

தங்கள்,
**அருமைப் பூனை.**

இந்தக் கடிதத்தைக் குரங்கு படித்து முடித்ததும், கரடி கையில் ஒரு கடிதத்துடன் அதற்கு எதிரே வந்து நின்றது.

"என்ன, உனக்கும் பூனை கடிதம் எழுதியிருக்கிறதா? புழக்கடைக் கதவைப் பூட்டச் சொல்லித்தானே?'' என்று கேட்டு விட்டுக் குரங்கு சிரித்தது.

"ஆமாம்!'' என்று கூறிக் கரடியும் சிரிப்பில் கலந்து கொண்டது.

---

# காலக்ஷேபம்

---

### வித்தியாசம்!

**முதல் பிரசங்கி:**—நான் பிரசங்கம் பண்ணும் போது ஜனங்கள் மணியைப் பார்த்தால், எனக்கு மிகவும் கஷ்டமாயிருக்கும்.

**இரண்டாவது பிரசங்கி:**—மணியைப் பார்த்தால், எனக்கு அவ்வளவு கஷ்டமாக இராது. ஆனால் கைக் கடியாரம் நின்று விட்டதோ என்ற சந்தேகத்துடன் காதில் வைத்துப் பார்ப்பதுதான் எனக்கு ரொம்பக் கஷ்டமாக இருக்கும்.

★

### நல்ல காரணம்

**மனைவி:**—என் நம்மால் ஒன்றுமே சேமிக்க முடியவில்லை? எவ்வளவு பணமிருந்தாலும் போதமாட்டேன் என்கிறதே?

**கணவன்:**—அதற்குக் காரணம் நாமல்ல—அடுத்த வீட்டுக்காரர்கள்தான். அவர்கள்தான் நம் சக்திக்கு மிஞ்சிய சாமான்களாக வாங்கித் தொலைக்கிறார்கள்!

### இவ்வளவுதானா!

**கணவன்:**—இந்த மாதிரி ஜாக்கெட் துணி எந்தக் கடையிலும் கிடைக்கவில்லை. எல்லாக் கடைகளையும் சுற்றிப் பார்த்து விட்டேன்.

**மனைவி:**—நல்ல வேளை, அதைத் தெரிந்து கொள்ளத்தான் உங்களை அனுப்பினேன். இனிமேல் இந்த மோஸ்தரை நான் பயமின்றிப் போட்டுக் கொள்ளலாம்.

★

### எச்சரிக்கை!

**முதலாளி** (குமாஸ்தாவைப் பார்த்து):—அந்தச் சாவுக்கார் வந்தால் நான் இல்லை என்று சொல்லும், என்ன, தெரிந்ததா?

**குமாஸ்தா:**—சரிதான் ஸார்!

**முதலாளி:**—சாவுக்கார் வரும்போது நீர் வேலை செய்ய வேண்டாம். நீர் வேலை செய்து கொண்டிருந்தால் நான் இல்லை என்பதை அவன் நம்பமாட்டான்!

# கம்பர் தரும் காட்சி

டி. கே. சி.

## 246. நானும் மகன் ஆவேனோ!

அவமானம் என்று ஒன்று இருக்கும் வரை மக்களுடைய உள்ளம் யுத்தத்தில் ஈடுபட்டே தீரும்.

அவமானத்துக்கு உள்ளாகியிருந்த ராவணனுக்கு, கும்பகர்ணன் யுத்தத்துக்கு அப்படியே புறப்பட வேண்டும் என்று சொன்னது உத்ஸாகத்தையே உண்டு பண்ணி விட்டது. கடிந்து சொன்ன சொல் எல்லாம் மறந்து போய்விட்டது. அவமானமும் மனசை விட்டு நீங்கிவிட்டது.

தான னன தன்ன னன
தன்ன னன தன் ன

'நன்று ரைசெய் தாய்,கு மர!
நானி துநி னைந் தேன்,
ஒன்றி இனி ஆய்தல் பழு(து),
ஒன்ன லரை எல் லாம்
கொன்று பெயர் வாம்; நம
கொடிப்ப டைகள் எல் லாம்
இன்றெ ழுதல் நன்றெ' ன
இராவ ணன்இ சைத் தான்.

[குமர: பிள்ளாய் என்று தம்பியை அருமைப்படுத்திச் சொல்லுவது: நானிது நினைந்தேன்: நீ சொல்லியதெல்லாம் என் நினைவுக்கும் வந்தன. இல்லை என்று சொல்லவில்லை; ஒன்றி இனி ஆய்தல் பழுது: வாஸ்தவந்தான் இந்தவிதமாகக் கூட்டம் போட்டு யோசனை செய்வது வேண்டாத காரியம்தான்; ஒன்னலரை: பகைவர்களை; பெயர்வாம்: வெற்றியுடன் திரும்புவோம்; நம கொடிப்படைகள் எல்லாம்: நம்முடைய வெற்றிக் கொடி ஏந்திச் செல்லும் வீரப் படைகளை எல்லாம்; இசைத்தான்: ஆரவாரத்தோடு ஆமோதித்தான்.]

* * *

கும்பகர்ணன் யுத்தத்துக்குப் போவது தான் காரியம் என்று சொன்னான். ராவணனும் யுத்தமே சரியான காரியம் என்று சொல்லி விட்டான். ராவணனது மூத்த குமாரனான இந்திரஜித்துக்கு வீராவேசம் பொங்கி விட்டது.

ஆனாலும் ராவணன் பேசிய ஒரு விஷயம் அவனுக்குப் பிடிக்க வில்லை.

என்ற வன்இ யம்பி யுறும்
எல்லை யினில், வல் லே,
'சென்று படை யோடு சிறு
மானு டர்சி னப் போர்
வென்று பெயர் வாய்அ ரச
நீகொல் !எம வீ ரம்
நன்று பெரி(து)!' என்று மகன்
நக்(கு)இ வைந வின் றான்

[என்றவன் இயம்பியுறும் எல்லையினில் வல்லே: ராவணன் படைகளை இப்போதே திரட்டி விட வேண்டியது என்று சொன்ன மாத்திரத்தில்; வல்லே: உடனே — சொன்ன ஆரம்பித்தான்; சென்று படையோடு சிறு மானுடர் சினப்போர் வென்று பெயர்வாய்: படைகளோடு செல்லுவாயாம், அற்ப மானுடர் செய்யும்போரில் அவர்களை வெல்வாயாம், வெற்றியுடன் திரும்புவாயாம்; அரச நீ கொல்: ராஜ சிம்மமாகிய நீயே இவ்வளவையும் செய்யவா; எம வீரம் நன்று பெரிதென்று: எங்களுடைய வீரம் இருக்கிறதே அது அடாடா! ரொம்ப ரொம்பப் பெரிது என்று; மகன் நக்கு இவை நவின்றான்: மகனாகிய இந்திரஜித்து சிரித்துக் கொண்டு சொன்னான்.

குறிப்பு:—இந்திரஜித்து இளவட்டம். எப்படியாவது போர் புரிய வேண்டும், வெற்றி கொண்டாட வேண்டும், அவ்வளவுதான். பழி

ஏற்படுமே, அவமானம் ஏற்படுமே, அரசியல் குலைந்து விடுமே என்று எண்ண நேரமில்லை அவனுக்கு.]

* * *

"என்னிடம் அரிய ஆயுதங்கள் இருக்கின்றன. சிவபெருமான் அருளியது, பிரமன் கொடுத்தது என்று சொல்ல வேண்டிய அத்தனை அரிய ஆயுதங்கள் இருக்கின்றனவே" என்று மேலும் சொல்லுகிறான்.

'ஈசன் அருள் செய்த னவும்,
ஏ(டு)அ விழ்ம லர்ப் பேர்
ஆச னம்உ வந்த வன்
அளித்த னவும் ஆய,
பாசம் முதல் வெம்ப டை
சுமந்து, (பலர் நின் றார்
ஏச,) உழல் வேன்ஒ ருவன்
யானும் உளன் அன் றோ!'

[ஈசன் அருள் செய்தனவும்: சிவபிரான் கொடுத்ததும்; ஏடு அவிழ் மலர்ப் பேர் ஆசனம் உவந்தவன்: விரிந்த இதழ் கொண்ட தாமரை மலரில் வீற்றிருப்பவனான பிரமன்; பாசம் முதல் வெம்படை: பாசக் கயிறு முதலான சக்தி வாய்ந்த ஆயுதங்களை சுமந்து: (பலர் நின்றார் ஏச: பக்கத்தி லிருப்பவர்கள் பலரும் என்னை இகழ்ந்து கொண்டிருக்கும்படி;) உழல்வேன்: மன வேதனைக்கு உள்ளாகிற: ஒருவன் நானும் உளன் அன்றோ: ஆண்பிள்ளையாகிய நானும் உயிரோடு இருக்கத்தானே செய்கிறேன்!— இருக்கலாமா என்பது குறிப்பு.]

* * *

இந்திரஜித்துக்கு ஆங்காரம் பொங்குகிறது, ஏமாற்றத்தால்தான்.

"பாதாளம், பூமி, வானம் என்று சொல்லப்படுகிற மூன்று உலகத்தினரும் மும்மூர்த்திகளுடனுமே வந்து போர் செய்யட்டும்."

'முற்ற முத லாய்உ லகம்
மூன்றும் எதிர் தோன் றிச்,
செற்ற முத லோரொ டு
செறுத்த தோர்தி றத் தும்
வெற்றி உன தாக வினை
யா(து)ஒ ழியின், என் னைப்
பெற்றும் இலை யால்,நெ றி
பிறந் தும் இலன் அன் றோ!'

[முற்ற: முழுதுமே பாக்கி இல்லாமல்; செற்ற முதலோரொடு: ஆங்காரம் கொண்டவர்களான மும்மூர்த்திகளுடனுமே; செறுத்த தோர் திறத்தும்: போர் புரிந்தபோதும்; வெற்றி உனதாக வினையாது ஒழியின்: உன் பக்கத்தில் வெற்றி அமையாது போனால்; என்னைப் பெற்றும் இலையால்: நான் ஒரு புத்திரன் உனக்கு இருக்கிறேன் என்று ஆகாது; நெறி பிறந்தும் இலன் அன்றோ: ஏன், உனக்குப் பிறந்த பிள்ளை என்று கூட ஆகாதே.]

அரக்கர்களுடைய போர் வெறிக்குத் தக்கபடி, பாத்திரத்தை அவ்வளவிக மாகப் பேச வைத்திருக்கிறது.

---

## அவர் ஒரு தோழர்!



"காம்ரேட், என்ன இது! இரவு நேரத்தில் குடை பிடித்துக்கொண்டு போகிறீர்! மழை கிழை ஒன்றும் இல்லையே!"

"இங்கே மழை பெய்யாவிட்டால் என்ன? இப்போது மாஸ்கோவில் மழை பெய்கிறதாம்!"

# விசித்திர வாழ்க்கை

கி. ரா. கோபாலன்

அந்தக் கடிதங்கள் அவளை உணர்ச்சி கொள்ளச் செய்தன. தன் அருமைக் குழந்தைகளிடமிருந்து அப்படிப்பட்ட கடிதங்கள் வருமென்று அவள் சற்றும் எதிர்பார்க்கவே யில்லை.

இது ருக்மணியின் கடிதம் :

“அம்மாவுக்கு நமஸ்காரம். உனக்கும் அப்பாவுக்கும் ஏற்பட்ட சச்சரவு கேட்டு நான் வருத்தப்படுகிறேன். அவர் மீது எவ்விதக் குற்றமும் சொல்ல முடியாது. இதற்கெல்லாம் காரணம் உனக்குக் குடும்பத்திலுள்ள அசிரத்தைதான் ......”

அதற்குமேல் அவளால் அந்தக் கடிதத்தைப் படிக்க முடியவில்லை. குழம்பிய மனதோடு வாசு எழுதிய கடிதத்தை எடுத்துப் படிக்கலானாள்.

“அம்மாவுக்கு நமஸ்காரம். உன் கடிதம் கிடைத்தது. நான் இப்படி ஒரு நாள் நடக்குமென்று நினைத்ததுதான். அப்பா செய்தது தான் சரி. ஒவ்வொரு பெண்ணும் குடும்பத்தில் சிரத்தை யுள்ளவளாக இருக்கவேண்டுமென்பதை அப்பாவைப் போல் நானும் விரும்புகிறேன் ......”

அவள் ஒரு நீண்ட பெருமூச்சு விட்டாள். நாற்பத்தைந்து வயதிற்கு மேல்—கல்யாணமாகி முப்பது வருடங்களுக்கு மேலான பிறகு அவள் வயிற்றில் பிறந்த குழந்தைகளாலேயே குடும்பப் பொறுப்பு உணராதவள் என்பதைக் கேட்க நேர்ந்ததற்கு மிகவும் மனது நொந்தாள் மீனாக்ஷி.

அவளுடைய பெண் ருக்மணிக்குச் சமீபத்தில்தான் விவாகம் நடந்தது. அவள் புருஷனோடு சௌக்யமாகக் குடித்தனம் நடத்துகிறாள். அவளுடைய மூத்த குமாரன் வாசுதேவன் சென்னையில் உத்யோகத்திலிருந்து தன் மனைவியோடு இன்பமாக இல்வாழ்க்கை நடத்துகிறான். அவளுடைய இளைய குமாரன் வேணுகோபாலன் சிறு வயதிலேயே நாடோடியாக வீட்டை விட்டுக் கிளம்பிவிட்டான். திரும்பி வரவே யில்லை. பம்பாயில் ஏதோ ரயில் விபத்தில் அவன் இறந்து விட்டதாகத் தந்தி வந்ததால் அவனை மறுபடியும் காண்போம் என்ற ஆசையை விட்டு விட்டனர். இப்பொழுது ஐம்பது வயதிற்கு மேலான அவளுடைய கணவரும் பரதேசியைப் போல் வெளியேறினார்.

அவளுடைய உடல் நடுங்கியது ; உள்ளம் சோர்ந்தது ; கண்களில் நீர் ததும்பியது. அப்படியே சிலைபோல் உட்கார்ந்திருந்தாள். அவளுக்குக் கல்யாணமான பிறகு குடும்ப வாழ்க்கையில் ஏற்பட்ட முப்பது வருட அநுபவமும் ஒன்றன்பின் ஒன்றாகத் தோன்றி மறைந்தன.

நான்கு நாட்களுக்கு முன்தான் அவளுடைய கணவர் வீட்டை விட்டுப் போனார். அவர் போகும்போது பேசிய பேச்சுக்களெல்லாம் அவள் நெஞ்சில் எதிரொலி செய்தன.

“மீனா! குடும்ப வாழ்க்கையில் எனக்கேற்பட்ட சுகதுக்கங்களெல்லாம் போதும்; உண்மையாகக் குழந்தைகளுக்காகத்தான் இத்தனை நாள் இந்த வீட்டிலிருந்தேன். ருக்மணியும் கல்யாணமாகி புருஷனோடு சௌக்கியமாக இருக்கிறாள். வேணு தன்னைப் பற்றிய கவலையை நமக்கு வைக்காமலே எங்கோ போய்விட்டான். இனி எனக்கென்ன இருக்கிறது இங்கே? வயதும் ஐம்பதிற்கு மேலாகி விட்டது. இப்படியே தேச சஞ்சாரம் போவதுதான் என் மனதிற்கு நிம்மதியைக் கொடுக்கும்...”

அவளுடைய கணவருக்கும் அவளுக்கும் ஒரு நாளும் இப்படிப் பேச்சு வார்த்தை நடந்ததே இல்லை. அவர்களிருவருக்கும் தகராறுகள் ஏற்பட எவ்வளவோ சந்தர்ப்பங்கள் ஏற்பட்டன ; காரணங்களும் இருந்தன. ஆனால் அவற்றை யெல்லாம் தம்முடைய சகிப்புத் தன்மையால் தவிர்த்து வந்தார் சுந்தரேசய்யர்.

இந்த வயதான காலத்தில் அவர் தேச சஞ்சாரம் செய்யக் கிளம்பியது அவளுக்கு உசிதமாகப்படவில்லை. தவிர தன்னிடம் அவர் ஏதோ தீவிரமான வெறுப்புக் கொண்டு கிளம்புவதாகத்தான் அவளுக்குப் பட்டது. “என்னை இங்கே தனியாக விட்டு விட்டுப் போகப் போகிறீர்களா?” என்று அலறினாள்.

“ஆமாம்!” என்றார் அவர். அவருடைய குரலில் கண்டிப்பும் உறுதியும் தொனித்தன.

சுந்தரேசய்யர் இருந்த நிலையில் அவருடைய பிடிவாதத்தை மாற்ற முடியாது; அவரைத் தடுத்து நிறுத்த முடியாது என்று அவளுக்குத் தோன்றியது. "அப்படியானால் நீங்கள் போகத்தான் போகிறீர்களா?" என்றாள் ஆற்றவொண்ணாத துயரத்தோடு.

அவர் வேறெங்கோ பார்த்துக்கொண்டே "ஆமாம்" என்று சொல்லி நிறுத்தினார் அழுத்தமான குரலில்.

"எங்கே?"

"எங்கேயா? எங்கே போவேனோ அது எனக்கே தெரியாது. ஒன்று மாத்திரம் நிச்சயம். நான் மறுபடியும் இங்கே திரும்பி வருவது சந்தேகம்."

அவள் ஒன்றும் பதில் பேசவில்லை. துக்கத்தினால் உள்ளம் குமுறுவதைத் தவிர அவளால் வேறொன்றும் செய்ய முடியவில்லை அப்போது.

ஒரே சட்டையுடனும் மேலே போர்த்திய வேஷ்டியுடனும் சுந்தரேசய்யர் வீட்டை விட்டு வெளியே போய் இன்று நான்கு நாட்களாகிவிட்டன. அவர் மறுபடியும் திரும்பி வருவாரென்ற நம்பிக்கை அவளுக்கு இல்லை. தன்னுடைய துக்கத்தைத் தாங்க மாட்டாதவளாய் தன்னுடைய பிள்ளைக்கும் பெண்ணுக்கும் கடிதம் எழுதியிருந்தாள். அவர்களிடமிருந்து இன்று வந்த பதில் கடிதங்களில் அவள் ஆறுதலடைவதற்கான வார்த்தைகளே இல்லை. அவள் பிரமை பிடித்தவள் போல் உட்கார்ந்திருந்தாள். முப்பது வருடத்து வாழ்க்கை வரலாறுகளையே திரும்பத் திரும்ப அவளது நெஞ்சம் படித்துக் கொண்டிருந்தது.

* * *

சுந்தரேசய்யர் ஒரு வக்கீல். கலியாணம் நடந்தபொழுது அவருக்கு வயது இருபத்திரண்டு; மீனாக்ஷிக்குப் பதினாறு. அவள் பணக்கார வீட்டுப் பெண்; செல்வமாக வளர்ந்தவள். விளையாட்டுப் போக்கிலேயே இருந்து விட்டதால் குடும்பக் காரியங்களில் கவலை ஏற்பட்டதே கிடையாது. கணவனோடு தனிக் குடித்தனம் செய்யும்பொழுது சகல குடும்பப் பொறுப்பும் அவளைச் சார்ந்ததாக இருந்தும் அதை அவள் உணரவே யில்லை. குடும்ப வாழ்க்கையின் ஆரம்பகாலத்தில் இதையெல்லாம் சுந்தரேசய்யர் பொருட்படுத்தாம லிருந்தார். அவருக்கு ஒரு விதவைத் தங்கை இருந்தாள். அவளே வீட்டுச் சமையல் முதல் குழந்தைகளைப் பாதுகாப்பது வரையில் உள்ள பொறுப்புக்களை ஏற்றுச் செய்யும்படியாகிவிட்டது. காலம் செல்லச் செல்ல சுந்தரேசய்யர் இவற்றையெல்லாம் உணர்ந்து மீனாக்ஷிக்கு நயமாகவும் பயப்படும்படியாகவும் எவ்வளவோ சொல்லிப் பார்த்தார். அவளும் அவர் வார்த்தைக்கு எதிர் வார்த்தை சொல்லுவதில்லை. எல்லாவற்றையும் கவனிப்பதாகத்தான் சொல்லுவாள். காரியாம்சத்தில் ஒன்றும் நடக்காது. ஊழலும் அசிரத்தையும்தான் அதிகமாக இருக்கும்.

மூன்று குழந்தைகள் பிறந்த பிறகும் அவளுடைய நிலைமை அப்படியேதான் இருந்தது. அவர் வெறுப்படைந்து தம் உத்தியோக அலுவல்களோடு குழந்தைகளைக் குளிப்பாட்டுவது, அவர்களுடைய உடை












களைச் சுத்தம் செய்வது, ஆகாரம் கொடுப்பது, தூங்கச் செய்வது, இடையிடையே தங்கைக்கு உதவியாக வீட்டுக் காரியங்களைச் செய்வதுமாகத் தானிருந்தார். இதனிடையே அவர் வக்கீல் தொழிலிலும் பிரசித்தியடைந்து ஊரிலே பெரிய பணக்காரரானதும் ஆச்சரியம்தான். 'ருக்மணிக்குக் கலியாணத்தைச் செய்து விட்டு நிம்மதியாக எங்கேயாவது போய்விடப் போகிறேன்' என்று அவர் அடிக்கடி சொல்லிக் கொண்டிருந்ததும் மீனாக்ஷிக்குத் தெரியும். அவர் அப்படிச் செய்து விடுவார் என்ற கவலை மீனாக்ஷிக்கு ஒரு நாள்கூட ஏற்பட்டதேயில்லை. ஆனால் இப்பொழுது அவர் சொல்லியபடியே செய்து விட்டார். அவர் சென்ற பிறகு அவருடைய தங்கையும் தன்னுடைய கிராமத்திற்குப் போய்விட்டாள்.

அதற்குப் பிறகுதான் மீனாக்ஷி தன் பொறுப்பற்ற தன்மையை உணர முடிந்தது. அவர்கள் தன்னை வெறுப்பதற்கான காரணங்கள் தன்னிடமிருப்பதாகத் தெரிந்தது. அவள் தனக்குத்தானே பச்சாத்தாபப்பட்டாள்; அழுதாள்; துடித்தாள்.

அவளுக்கு ஒரு குறைவுமில்லை. பெரிய வீடு, பணம் எல்லாமிருந்தது. எது இருந்தாலென்ன? அந்தத் தனிமை — பிரிவாற்றாமை — மகா பயங்கரமானதாக இருந்தது. அவ்வளவு பெரிய வீட்டில் பேய்கூடத் தனிமையில் நடமாட அஞ்சுமே?

மூன்று வாரங்கள் ஓடி விட்டன. அவளுக்குச் சமையல் செய்தே பழக்கமில்லை. ஆனால் ஏதோ செய்தாள். ஏதோ சாப்பிட்டாள்.

* * *

அன்று இரவு மணி ஏழு இருக்கும். யாரோ வீட்டுக் கதவைத் தட்டுவதுபோல் அவளுக்குப் பட்டது. அவர் தான் திரும்பி வந்திருப்பாரோ என்ற எண்ணத்தில் ஓடோடிப் போய்த் திறந்தாள்.

அவர் இல்லை; ஒரு பெண்! சுமார் இருபது வயதிருக்கும். ஏழ்மையும் துயரமும் தோய்ந்த முகம்! அவள் கையில் ஆறு மாதம் கூட நிரம்பாத ஒரு குழந்தை இருந்தது.

"யாரம்மா நீ?"

"இது தானே வக்கீல் சுந்தரேசய்யர் வீடு?" என்று பயத்தோடு கேட்டாள். அந்தக் குழந்தையைத் தாங்கச் சக்தியற்றவைபோல் துவண்டன அவளுடைய மெல்லிய கரங்கள்.

"ஆமாம்—இதுதான்"

"நீங்கள்...நீங்கள் நான் எழுதிய கடிதத்தைப் பார்க்கவில்லையா?" என்றாள் அந்தப் பெண் தடுமாறியபடியே அச்சத்தோடு.

"கடிதமா? நீ யார்?"

"நான் உங்கள் நாட்டுப் பெண்"

"நாட்டுப் பெண்ணா?"

"ஆமாம் உங்கள் இரண்டாவது பிள்ளை......"

"வேணுகோபாலன்......"

"அவருடைய சம்சாரம் தான் நான்"

"நீ வேணுவினுடைய சம்சாரமா? அவன் எங்கே கல்யாணம் செய்து கொண்டான்? அவன் தான் இறந்து விட்டானென்று தந்தி வந்ததே......"

அந்தப் பெண் பயத்தோடு கெஞ்சுவது போல் மீனாக்ஷியின் முகத்தைப் பார்த்தாள். அவளுக்குப் பேச நா எழவில்லை. கண்களிலிருந்து முத்து முத்தாகக் கண்ணீர் வழிந்தவண்ணமாகவே இருந்தது. "ஆமாம்! அவர் ரயில் விபத்தில் இறந்து விட்டார். அதற்கு முன்னால் அவர் என்னைக் கல்யாணம் செய்துகொண்டார். இந்தக் குழந்தை......"

"அவனுடையதா?" என்று கூறி மீனாக்ஷி துள்ளிக் குதித்தாள். "அவன் கல்யாணம் செய்து கொண்டதாக எங்களுக்குத் தகவலே இல்லையே? இதென்ன விபரீதம்...?"

"என்னிடம் நிரூபிப்பதற்கு ஒன்றுமில்லை. இந்தக் குழந்தையின் முகத்தைப் பார்த்துத் தான் நம்ப வேண்டும்" என்று அந்தப் பெண் கண்களில் நீர் ததும்பியபடியே சொல்லி விட்டுக் குழந்தையை மார்போடு அணைத்துக் கொண்டாள்.

அவளுடைய வார்த்தைகள் மீனாக்ஷியைத் திடுக்கிட வைத்தன. "எங்கே குழந்தையைக் காட்டு" என்று சொல்லிக் குழந்தையின் முகத்தைப் பரபரப்போடு பார்த்து விட்டுத் திகைத்து நின்றாள். சட்டென்று நிமிர்ந்து அந்தப் பெண்ணின் முகத்தை அனுதாபத்தோடு பார்த்தபடியே கைகளை நீட்டி அக்குழந்தையை வாங்கிக் கொண்டு "சரி; உள்ளே வா!" என்றாள்.

இருவரும் உள்ளே சென்றனர். மீனாக்ஷி ஒரு சாய்வு நாற்காலியில் உட்கார்ந்து, மடியில் குழந்தையை வைத்துக் கொண்டு அதன் முகத்தைப் பார்த்தபடியே "சரி! எல்லாவற்றையும் விவரமாகச் சொல்லு" என்றாள்.

அந்தப் பெண் தயங்கியபடியே சிறிது நேரம் நின்று விட்டுத் தன்னைச் சமாளித்துக் கொண்டவள் போல் "நான் இந்தக் குழந்தையுடன் என் தாயார் வீட்டுக்குப் போகலாமென்று நினைத்து வந்தேன். அவள் மதுரைக்குப் பக்கத்தில் ஒரு கிராமத்திலிருக்கிறாள். பம்பாயிலிருந்து சிறிது பணத்துடன் தான் புறப்பட்டேன். மிகவும் சிரமப்பட்டு இவ்வளவு தூரம் வந்து விட்டேன். தொடர்ந்தாற்போல் மதுரை வரை போவதாயிருந்தால் குழந்தைக்கு ஏதாவது நேர்ந்து விட்டால் என்ன செய்வது? நீங்கள் இந்த ஊரிலிருக்கிறீர்களென்று அடிக்கடி அவர் சொல்லியிருக்கிறார். சில நாள் வேண்டுமானால் இங்கே தங்கிப் போகலாமென்று நினைத்து வந்தேன். இந்தக் குழந்தைக்காகத் தான்......" என்றாள்.














முதலாளி :— இன்றைக்கு வேலை கேட்கிறபோது ரொம்ப சாது மாதிரிதான் பேசுகிறீர்! நாளைக்கு 'ஸ்ட்ரைக் பண்ணுகிறேன்' என்று சொல்வீர்!

வேலை கேட்டவர் :—அந்த மாதிரி நாளைக்கு என்று ஒரு காரியத்தைத் தள்ளிப் போடுகிற வழக்கம் என்னிடம் கிடையவே கிடையாது, ஸார்!

மீனாக்ஷி தன் மடியிலிருந்த குழந்தையைப் பார்த்துக் கொண்டேயிருந்தாள். அந்தக் குழந்தை அவள் மடியில் தரிக்காமல் துள்ளிக் கொண்டிருந்தது. ஆண் குழந்தை! அதைப் பார்க்கப் பார்க்க அவள் மனதில் ஏதேதோ ஞாபகங்களெல்லாம் எழுந்தன. அந்தக் கருத்த சுருட்டை மயிர், அகன்ற நெற்றி, கூரான மூக்கு, பெரிய கண்கள் எல்லாம் வேணுவின் சாயலாகத்தானிருந்தது. அந்தப் பெண் வேணுவின் மனைவி தான் என்பதற்கு வேறு என்ன நிரூபணம் வேண்டும், இந்தக் குழந்தையைவிட? அவள் ஆர்வத்தோடு குழந்தையை மார்போடு அணைத்தபடியே "நான் கல்யாணம் செய்து கொண்ட விவரங்களையெல்லாம் எங்களுக்கு வேணு ஏன் எழுதவில்லை?" என்றாள்.

"அவர் பயப்பட்டார். நான் மிகவும் ஏழை வீட்டுப் பெண். தவிர எங்கோ போன இடத்தில் ஒரு பெண்ணைக் கல்யாணம் செய்து கொள்வதென்றால் நீங்கள் சம்மதிப்பீர்களா? அதனால் உங்களுக்கு எவ்விதத் தகவலும் கொடுக்கவில்லை. இந்தக் குழந்தை பிறந்த பிறகு தான் ஒரு நாள் எல்லாவற்றையும் உங்களுக்கு எழுதப் போவதாகச் சொன்னார். ஆனால் அதற்குள் அந்தப் பாழும் ரயில் விபத்து......"

"சரிதான்—உன் பெயரென்ன?"

"சாந்தா."

"உங்கள் சொந்த ஊர் எது? உன் தகப்பனாருக்கு என்ன வேலை?"

"மதுரைக்குச் சமீபத்தில் வண்டுருளம் என்னும் கிராமம். என் தகப்பனாருக்கு அந்தக் கிராமத்தில் கர்ணம் வேலை. அவர் இறந்து போய் விட்டார். நான் பம்பாயில் என் மாமா வீட்டிலிருந்தேன்......"

"இந்தக் குழந்தைக்கு ; என்ன பெயர் வைத்திருக்கிறாய்?"

"மாது—மாதவன்."

"உன் தாயாருக்கு நான் புக்ககத்திலிருக்கிறேன் என்று ஒரு கடிதம் எழுதிப் போட்டுவிடு. நீ இங்கே எவ்வளவு நாள் வேண்டுமானாலும் தங்கலாம். ஏன், இது உன் வீடுதானே?" என்று குழந்தையை அணைத்துக்கொண்டு முத்தம் கொடுத்தாள்.

"அம்மாவுக்கு இப்பொழுது கடிதம் எழுதவேண்டிய அவசரம் இல்லை. நான் இங்கே தங்குவதில் அவருக்கு எதுவும் ஆட்சேபணை யிராதே? இப்படி அனாதையாக ஒரு பெண் வந்து......"

"அவரா? உன் மாமனாரைச் சொல்லுகிறாயா? அவர் ஊரிலில்லை. எப்பொழுது வருவாரோ? அதைப் பற்றிய கவலை எனக்குத்தான். நீ வந்ததில் எனக்கொரு சந்தோஷம்; மன நிம்மதி. நான் தனியாக இவ்வளவு பெரிய வீட்டில் எவ்வளவு கஷ்டப்பட்டுக் கொண்டிருந்தேன் தெரியுமா?"

மீனாக்ஷியின் முகத்தில் கண நேரம் வேதனைக் குறி தோன்றி மறைந்தது. ஒரு துணை அகப்பட்டதில் அவளுக்கேற்பட்ட சந்தோஷத்தைச் சொல்லி முடியாது. மௌனம் சூழ்ந்த அந்த வீட்டில் மறுபடியும் கலகலப்பான குரல் கேட்பது அவளுக்கு எவ்வளவோ மன நிம்மதியை உண்டாக்கியது. பெரிய மாடிப் படியில் அந்தப் பெண் ஏறி இறங்கும் சப்தமும், இரவு வேளையில் அடிக்கடி குழந்தை அழும் குரலும் அவளுக்கு எவ்வளவு சந்தோஷத்தை உண்டாக்கின?

• • •

ஒரு வருடம் ஓடிவிட்டது. ஒருநாள் அவளுடைய கணவர் அவள் எதிரில் வந்து நின்றார். அப்படியே திடுக்கிட்டு விட்டாள். அவர் எவ்வளவு மாறிவிட்டார்? அவர் உடம்பு எப்படி இளைத்துத் துரும்பாகப்

போய்விட்டது! அழுக்குப் படிந்து பிசுக்கேறிய உடை அரைகுறையாக நரையோடிய நீண்ட தாடி. எதிலும் குறிப்பில்லாமல் சுற்றியலையும் கண்கள். மீனாக்ஷிக்கு முதலில் அவரை யாரென்று தெரிந்து கொள்வதே சிரமமாயிருந்தது. தன் கணவர் என்று தெரிந்து கொண்டதும் கால்களில் விழுந்து கதறினாள். அவருடைய வார்த்தையிலிருந்து அவர் அவளிடம் கொஞ்சமாவது பச்சாத்தாபப் பட்டதாகத் தெரியவில்லை. "போகிற வழியில் இந்த ஊரில் இரண்டு நாள் தங்கலாமென்று வந்தேன்........." என்றார்.

"இந்த வீட்டில் நான் மாத்திரமில்லை. எனக்காக நீங்கள் தங்கவேண்டாம். உங்கள் பேரனுக்காகவாவது நீங்கள் இருங்கள்" என்றாள் மீனாக்ஷி.

பேரன் என்ற சொல்லைக் கேட்டதும் அவர் திடுக்கிட்டார். "பேரனா? வாசுவின் குழந்தையா?" என்றார்.

"இல்லை. சின்னவனுடைய குழந்தை, வேணுவினுடைய குழந்தை. அவனுடைய சம்சாரமும் குழந்தையும் ஒரு வருஷமாக இந்த வீட்டில்தான் இருக்கிறார்கள்."

இதைக் கேட்டதும் அவருக்கு ஆச்சர்யத்திற்குமேல் ஆச்சரியமாக இருந்தது.

மீனாக்ஷி விஷயத்தை விவரமாகச் சொன்ன பிறகுதான் அவருக்கு நம்பிக்கை ஏற்பட்டது.

ஒரு நாள்—இரண்டு நாள்—ஒரு வாரமும் ஓடிவிட்டது. சுந்தரேசய்யருக்கு மறுபடியும் தேச சஞ்சாரம் போகும் எண்ணம் இருப்பதாகத் தெரியவில்லை. மீனாக்ஷியும் அதைப்பற்றி ஒன்றும் கேட்கவில்லை.

ஒரு நாள் மீனாக்ஷி சாந்தாவிடம் "நீ உன் தாயாரை வேண்டுமானால் ஒரு தடவை குழந்தையோடு போய்ப் பார்த்து விட்டு வா. ஆனால் அங்கேயே தங்கிவிடாதே! என்னாலும் அவராலும் உன்னையும் குழந்தையையும் விட்டுப் பிரிந்திருக்கவே முடியாது!" என்றாள். இதைக் கேட்டதும் சாந்தா தலை குனிந்து கொண்டாள். அவள் கண் இமைகளில் முத்து முத்தாகக் கண்ணீர் துளித்தது. "நான் தாயற்றவள்! என் தாயார் எனக்கு நினைவு தெரியும் முன்னேயே இறந்து விட்டாள். எனக்கு உங்களையும் இந்தக் குழந்தையையும் தவிர வேறு கதியே கிடையாது!" என்றாள்.

"அப்படியானால் உனக்குத் தாயார் இருப்பதாக முன்னால் சொன்னாயே?" என்று மீனாக்ஷி வியப்புத் தாங்காமல் அவளைப் பார்த்துக் கேட்டாள்.

"அது பொய்! வேண்டுமென்றேதான் சொன்னேன். நீங்கள் என்னிடமும் குழந்தையிடமும் அனுதாபப் படுவீர்களோ, மாட்டீர்களோ என்ற சந்தேகம். நானும் அவரும் உங்களுக்கெல்லாம் தெரிவிக்காமல் கல்யாணம் செய்து கொண்டதில் உங்களுக்குக் கோபமிருக்காதா? இந்தக் குழந்தையோடு சில நாள் உங்களோடு பழகினால் உங்களுக்கு நம்பிக்கை உண்டாக்கலாம் என்று எண்ணினேன். அதனால்தான்..."

மீனாக்ஷி அனுதாபத்தோடு சாந்தாவை அணைத்துக் கொண்டாள். அவளுக்கு என்ன சொல்லுவதென்றே தெரியவில்லை.

அறையிலிருந்து குழந்தை அழும் குரல் கேட்டது. "'மாது அழுகிறான், பசி நேரம்! பாலைக் கொண்டுவா!" என்று சொல்லிக் கொண்டே மீனாக்ஷி ஓடினாள். அதற்கு முன்பே அங்கு வந்து நின்று தொட்டிலை ஆட்டிக் கொண்டிருந்த சுந்தரேசய்யர், "அடேடே! உனக்குக்கூடக் குழந்தை அழுதால் கவனிக்க வேண்டும் என்ற கவலையெல்லாம் ஏற்பட்டுவிட்டதே! இதுதான் குடித்தனம், தெரிந்ததா? இப்படியிருக்கிற ஒரு பெண்டாட்டியை விட்டு விட்டுத் 'தேசாந்திரம் போகிறேன், சந்நியாசம் வாங்கிக் கொள்ளுகிறேன்' என்றால் பயித்தியக்காரத் தனம்தான்" என்று சிரித்துக் கொண்டே சொன்னார்.

யாரோ ஒரு பெண், குழந்தையுடன் வந்து 'நான் உங்கள் நாட்டுப் பெண்; இந்தக் குழந்தை உங்கள் பேரன்' என்று சொல்லி அந்தக் குடும்பத்தோடு ஐக்கியமாகி விட்டது ஆச்சரியமாகத்தான் இருக்கும். ஆனால் அந்தக் குடும்பம் குடும்பமாகியது அவளாலும் அந்தக் குழந்தையினாலுமே அல்லவா?

# மலாய் நாட்டில் கொந்தளிப்பு

ஜெயமணி

"மலாய் நாட்டில் பிரிட்டிஷாரின் பிடி நழுவி வருகிறது" என்று சில தினங்களுக்கு முன் பிரிட்டிஷ் காலனி மந்திரி லார்டு லிஸ்டோவெல் பார்லிமெண்டில் ஒப்புக்கொண்டார்.

"மலாயாவில் கலகக்காரர்களின் கை ஓங்கி நிற்கிறது. அவர்கள் இராணுவ உடையுடன் கட்டுக்கோப்பாக வேலை செய்து வருகிறார்கள். எனவே நாளுக்கு நாள் நிலைமை மோசமாகிக் கொண்டே வருகிறது" என்று மலாயாவிலுள்ள ஒரு பிரபல பிரிட்டிஷ் அதிகாரி சென்ற வாரம் கூறினார்.

மலாயா கலகக்காரர்களின்மீது சகல வித போர்க் கருவிகளையும் உபயோகித்துச் சென்ற பல மாதங்களுக்கு மேலாக யுத்தம் செய்து பார்த்தபின் பிரிட்டிஷ் அதிகாரிகள் அவ்வாறு பிரலாபிக்க வேண்டிய நிலைமை ஏற்பட்டிருக்கிறது. அதிலிருந்து அந்த நாட்டின் கொந்தளிப்பு எவ்வளவு தூரம் முற்றியிருக்கிறது என்பதை ஊகித்துக் கொள்ளலாம்.

* * *

பண்டித ஜவாஹர்லால் நேரு பத்து வருஷங்களுக்கு முன் முதல் தடவையாக மலாயாவுக்கு விஜயம் செய்தபோது அந்த நாட்டின் இயற்கை வனப்பைக் கண்டு அதிசயித்தார். அதன் செல்வச் செழுமையைக் குறித்து ஆச்சரியப்பட்டார். எனினும் கல்வித் துறையிலும் அரசியல் விஷயங்களிலும் மலாய் நாடு மிகவும் பிற்போக்காக இருப்பதை ஜவாஹர்லால்ஜி குறிப்பிடாமல் விடவில்லை. "**மலாயா ஓர் அரசியல் மடு**" என்று சுருக்கமாக வர்ணித்து, அதன் நிலைமையைக் கண்டு மிகவும் வருந்தினார்.

அப்போது மலாயாவில் அரசியல் பேச்சுக்கே இடம் இல்லாமலிருந்தது. வோட்டுரிமை, வாக்காளர், தேர்தல், ஜனப் பிரதிநிதி சபை போன்ற ஜனநாயக அம்சம் எதையும் அங்கு மருந்துக்குக்கூடக் காண முடியாது.

அந்த நாடு மிகவும் செழுமையாகவும் சுபிட்சமாகவும் இருந்ததால், அரசியல் விஷயங்களைப் பற்றி யாரும் கவலைப்படவில்லை. ஒரு நாட்டின் அமைதியைக் குலைப்பதற்கான வறுமை, வேலையில்லாக் கஷ்டம், பிச்சைக்காரர் தொல்லை முதலியன மலாயாவில் இல்லை. எனினும் அப்போதைக்கப்போது குறிப்பாக ரப்பர் தோட்டங்களில் வேலை செய்யும் இந்தியத் தொழிலாளர் மாத்திரம் சம்பளம் போதவில்லை என்று கிளர்ச்சி செய்து வந்தார்கள்.

ஐரோப்பாவில் யுத்தம் ஆரம்பமான சில மாதங்களுக்குப் பின், — ஜப்பான் யுத்தம் ஆரம்பமாவதற்குச் சில மாதங்க

ளுக்கு முன்—தொழிலாளரின் கிளர்ச்சி உச்ச நிலையை அடைந்தது.

**ம**லாய் நாட்டின் மொத்த விஸ்தீர்ணம் சென்னை மாகாணத்தில் பாதிகூட இல்லை! அதிலும் முக்கால் பாகத்துக்கு மேல் அடர்ந்த காடுகள் நிறைந்து கிடக்கின்றன! அப்படியிருந்தும் அதன் கீர்த்தி உலகம் முழுதும் வியாபித்திருப்பதற்குக் காரணம், அங்கு வற்றாத செல்வமான ரப்பரும் ஈயமும் கிடைப்பது தான். ரப்பர், ஈய உற்பத்தியில் மலாய் நாடு உலகிலேயே முதல் ஸ்தானம் வகிக்கிறது.

மலாயாவின் ஜனத்தொகை அறுபது லட்சம் ஆகும். அங்கு சுமார் இருபத்தாறு லட்சம் சீனர்களும், இருபத்தைந்து லட்சம் மலாய்க்காரர்களும், ஏழு லட்சம் இந்தியர்களும் இருக்கிறார்கள்.

மலாய் நாட்டின் ஒரு விசித்திரமான அம்சம் என்னவெனில், அனேகமாக அந்த நாட்டிலுள்ள எல்லா ஜனங்களும் வெளி நாடுகளிலிருந்து வந்து குடியேறியவர்களே. அங்குள்ள மலாய்க்காரர்கள் கூட (முஸ்லிம்கள்) இந்தோனேஷியாவிலிருந்து வந்தவர்கள்.

ஸ்ரீ விஜய, சைலேந்திர சாம்ராஜ்யம் அங்கெல்லாம் பரந்திருந்த காலத்தில் இந்தோனேஷியர்கள் ஹிந்துக்களாகவும் பௌத்தர்களாகவும் இருந்தனர். பின்னர் அவர்கள் எல்லோரும் அங்கு சென்று ஸ்தாபித்த அராபிய வர்த்தகர்களால் மதம் மாற்றப்பட்டார்கள் என்று சரித்திரம் கூறுகிறது. அதற்கு இன்னும் அத்தாட்சிகள் இருக்கின்றன. மலாய்க்காரர்களும் இந்தோனேஷியர்களும் பேசும் மலாய் பாஷையில் இந்திய பாஷைகளிலுள்ள வார்த்தைகள் ஏராளமாக இருப்பதும் அத்தகைய அத்தாட்சிகளில் ஒன்றாகும்.

மலாயாவில் ராஜாங்க பாஷை ஆங்கிலம் என்றாலும் ஜனங்களுக்கு மலாய்பாஷையே பொது பாஷையாக இருந்து வருகிறது. அங்கு ஆங்கிலேயர், மலாய்க்காரர், இந்தியர், சீனர் முதலிய பல்வேறு நாட்டினர் இருப்பினும் தொண்ணூற்றென்பது சதவிகித ஜனங்களும் மலாய் பாஷையே பேசுவதால், பரஸ்பரம் பழகுவதில் சிறிதும் கஷ்டமில்லை. மலாயாவுக்குப் புதிதாக வருவோரும் இரண்டொரு மாதங்களில் மலாய் பாஷையைக் கற்றுக்கொண்டு விடுவார்கள். சீனர் — இந்தியரிடையே ஒற்றுமை நிலவுவதற்கு இது ஒரு முக்கிய காரணம் எனலாம். இல்லாவிடில் இந்திய, சீன, மலாய் சமூகத்தினர் நெருங்கிப் பழக முடியாமல், என்றென்றும் ஒருவரை மற்றொருவர் அறிந்து கொள்ள முடியாத அன்னியர்களாகவே இருக்க நேரும்.

**ம**லாயாவில் பிரிட்டிஷாரின் ஆதிக்கம் ஏற்பட்ட பின், அங்கு ரப்பர் உற்பத்தி செய்வதற்காகவும் ஈயம் வெட்டி எடுப்பதற்காகவும் லட்சக்கணக்கில் இந்தியத் தொழிலாளரையும் சீனத் தொழிலாளரையும் கொண்டு வந்தார்கள்.

பிறகு, சீனாவில் உள்நாட்டு யுத்தமும் ஜப்பானின் ஆதிக்கமும் ஏற்பட ஆரம்பித்ததால், அவற்றால் பாதிக்கப்பட்ட ஏராளமான சீனர்கள் சயாம், இந்தோனேஷியா, மலாயா, பர்மா முதலிய பல நாடுகளுக்கும் வந்து குடியேறினர்.

மலாயாவில் சீனர்களின் தொகை நாளுக்கு நாள் அதிகமாகி வந்ததாலும், சீனாவிலிருந்து ஏராளமாகக் கம்யூனிஸ்டுகள் வருவதாக பிரிட்டிஷாருக்குச் சந்தேகம் ஏற்பட்டதாலும், அங்கு சீனர்கள் வந்து குடியேறுவதைத் தடுக்கவும் கட்டுப்படுத்தவும் ஆரம்பித்தார்கள்.

சீனர்கள் இணையற்ற சுறுசுறுப்பும் சுய நம்பிக்கையும் உடையவர்களாதலின்,



"பியூன் போட்ட கடுதாசைக் கையாலே தொட மாட்டேன் என்கிறீர்களே? அவ்வளவு என்ன அவன் பேரில் உங்களுக்குத் துவேஷம்?"
"துவேஷம் ஒன்றும் இல்லேடி! அந்தப் பயல் தபால் கவரை எச்சிற்படுத்தி ஒட்டியிருப்பான்!......"

அவர்கள் சில வருஷங்களில் மலாய்க்காரர்களையும் இந்தியர்களையும் காட்டிலும் எவ்வளவோ மடங்கு முன்னேற்றம் அடைந்து விட்டார்கள். இன்று மலாயாவிலுள்ள செல்வத்தில் பெரும்பகுதி சீனர்களிடம் இருக்கிறது என்று கூறுவது மிகையாகாது. மற்றும் முக்கியமான சகல வியாபாரங்களும் சீனர்களின் கையில்தான் இருக்கின்றன. எனவே, அவர்களுடைய தயவின்றி அங்கு ஐரோப்பியர்களோ, இந்தியர்களோ, மலாய்க்காரர்களோ நிம்மதியாக வாழ்வது என்பது இன்றைய நிலையில் முடியாத காரியம்.

மலாயாவிலும் பிரிட்டிஷார் பிரித்தாளும் தந்திரத்தைக் கையாண்டு பார்த்தார்கள். சென்ற யுத்தத்துக்கு முன் அங்கு அவர்கள் சீனர்களுக்கே அதிகச் சலுகைகள் காட்டி வந்தனர். எனினும் சீனர்களிடம் பிரிட்டிஷாருக்கு உள்ளூற சந்தேகம் இருக்கத்தான் செய்தது. மலாயா இராணுவத்தில் சீனரில் ஒருவரைக் கூடச் சேர்த்துக் கொள்ளாததே அதற்கு உதாரணம்.

மலாயாவில் மற்ற சமூகத்தினரைக் காட்டிலும் சீனர்களின் தொகையே அதிகம். அப்படியிருந்தும் மலாயா போலீஸில் சீனர்களின் தொகை மிக மிகக் குறைவாகும்.

தற்காப்புக்காகக் கம்யூனிஸ்டுகளுக்குப் பணம் கொடுப்பதாகக் கூறிச் சமீபத்தில் மலாயா சர்க்கார் பல செட்டியார்கள் உள்பட ஏராளமான முதலாளிகளைக் கைது செய்தனர் என்ற செய்தி பத்திரிகைகளில் வெளியாகியிருந்தது. மலாயாவிலுள்ள செல்வந்தர்கள் கம்யூனிஸ்டுகளுக்குத் தொகை கொடுப்பதென்பது மலாயாவில் சென்ற பல பல வருஷங்களாக நிகழ்ந்து வருகிறது.

சென்ற யுத்தத்துக்கு முன் மலாய் நாட்டின் கவர்னராகவும் சேனாதிபதியாகவும் இருந்தவரும், ஜப்பானியரால் கைது செய்யப்பட்டு யுத்தம் முடிந்தபின் விடுதலை அடைந்தவருமான சர் ஷெண்டன் தாமஸ், "மலாயாவில் சென்ற இருபது வருஷங்களுக்கு மேலாகக் கம்யூனிஸ்டுகளின் தொல்லை இருந்து வருகிறது" என்று சமீபத்தில் குறிப்பிட்டிருந்தார்.

ரப்பர் தோட்ட மானேஜர்களான ஆங்கிலேயர்கள் கூடக் கம்யூனிஸ்டுகளுக்கு வருஷம் தவறாமல் கப்பத் தொகை கட்டி வந்த காலம் உண்டு. பெரிய செல்வந்தர்கள் சர்க்காருக்கு வரி செலுத்தும் விஷயத்தில் தகிடுதத்தம் செய்தாலும், கம்யூனிஸ்டுகளுக்கு மாத்திரம் ஒழுங்காகக் குறிப்பிட்ட தொகையைச் செலுத்தி விடுவார்கள்! அவர்களுக்குத் தொகை கொடுக்க மறுத்தவர்களோ, அல்லது அவர்களை அதிகாரிகளுக்குக் காட்டிக் கொடுத்தவர்களோ உயிர் தப்பியதே இல்லை! "பொது ஜனங்கள் ஒத்துழைப்பார்களாயின் கம்யூனிஸ்டு தொல்லையை ஒரு சில நாட்களில் அறவே ஒழித்துவிடுவோம்" என்று மலாயா சர்க்கார் அதிகாரிகள் அடிக்கடி கூறுவதிலிருந்து, அவ்விஷயமாகப் பொது ஜனங்கள் ஒத்துழைக்க அஞ்சுகிறார்கள் என்பது தெரிகிறது.

அப்போதெல்லாம் மலாய் நாடு மிகவும் சுபிட்சமாக இருந்ததாலும், அரசியல் கொந்தளிப்பு எதுவும் இல்லாததாலும் சர்க்கார் அவ்விஷயமாக அதிகக் கவலைப் படவில்லை. ஆனால், அரசியல் மடுவாக இருந்த மலாய் நாட்டில் யுத்தத்துக்குப் பின் கொந்தளிப்பு உண்டாகி அரசியல் ஊற்றுப் பெருக்கு எடுத்து ஓட ஆரம்பித்து விட்டதால், அதிகாரிகள் இன்ன செய்வது என்று புரியாமல் கம்யூனிஸ்டுகள், முதலாளிகள், தொழிலாளர் முதலிய எல்லோருடைய தலையிலும் கை வைக்க ஆரம்பித்திருக்கிறார்கள் போலும்!

* * *

மலாயாவில் கம்யூனிஸ்டுகள் இன்று பிரிட்டிஷ் சர்க்காரையே ஆட்டி வைக்கும் வல்லமை பெற்றதற்கு முக்கிய காரணஸ்தர்கள் பிரிட்டிஷார்தான்.

1939-ம் ஆண்டு இரண்டாவது உலக மகா யுத்தம் ஆரம்பமானதும் மலாயா ரப்பருக்குச் சுக்ரதசை அடிக்கத் தொடங்கியது. ரப்பர் விலை நாளுக்குநாள் உயர்ந்து கொண்டு போயிற்று. எனவே, ரப்பர் தோட்ட முதலாளிகள் கோடிக் கணக்காக லாபம் திரட்டினர். ஆனால், ரப்பர் விலைதான் உயர்ந்துகொண்டு போயிற்றேயன்றி, தொழிலாளரின் சம்பளம் இருந்த இடத்தை விட்டு நகரவில்லை! யுத்தகாலமானதால் தங்களுடைய தினசரி சம்பளத்தில் ஐந்து அல்லது பத்து காசு (இரண்டரை அணா) உயர்த்த வேண்டும் என்று தொழிலாளர் கோரினர். ரப்பர் விலை மந்தமாக இருந்த காலத்தில் இந்தியத் தொழிலாளர் தங்களுடைய சம்பளத்தைக் குறைத்துக்கொள்ள இணங்கினர் என்பது இங்கு குறிப்பிடத் தக்கது.

சுக்கும் யானைக்கும் ஏதாவது சம்பந்தம் உண்டா? அதுபோல தொழிலாளரின் கோரிக்கைக்கும் தோட்ட முதலாளிகளின் லாபத்துக்கும் சம்பந்தமேயில்லை. அப்படியிருந்தும் மிக மிக அற்பமான பத்துக் காசுகூடச் சம்பளத்தில் உயர்த்த கோமகவர்களான முதலாளிகள் விரும்பவில்லை. ஆங்கிலேய முதலாளிகளுக்கு ஆங்கிலேய சர்க்காரும் பக்கபலமாக நின்றனர்.

(அடுத்த இதழில் முடியும்)

"காவேரி பிராண்ட்"

# காஸ்டிக் சோடா

உற்பத்தி தொழில், தொழிற்சாலைகள்,
சாயச்சாலைகளுக்கு விசேஷ சலுகைகள்

இந்தியாவின் பிரதான ரஸாயன தொழிற்சாலையில்
தேசியத் தேவைக்கெனத் தயாராவது



உற்பத்தியாளர்:

**மேட்டூர் கெமிகல் & இண்டஸ்ட்ரியல் கார்ப்பொரேஷன் லிட்.**

**மேட்டூர் அணை - சேலம்**

மானேஜிங் ஏஜெண்ட்ஸ்:

**சேஷசாயி பிரதர்ஸ் லிமிடெட்**

**திருச்சிராப்பள்ளி**

பூரண விற்பனை ஏஜெண்ட்ஸ்:

**அலைட் இண்டஸ்ட்ரியல் டிஸ்ட்ரிப்யூடர்ஸ் லிமிடெட்**

**120, அரண்மனைக்காரத் தெரு - மதராஸ்-1**

# பட்டுத் துணி கெஜம் ரூ. 1-0-0



நீங்கள் எந்த இடத்திலாயினும் பட்டுத் துணியை கெஜம் 1-க்கு ரூ. 1-0-0 விதம் வாங்க முடியுமா? நாங்கள் கடை விலையை விட மிக மலிவான விலைக்கு சப்ளை செய்ய ஒப்புக் கொள்வோம். துணி மிகச் சிறப்பா யிருக்கும். சகல உபயோகத்திற்கும் உகந்தது. வெள்ளை **அமெரிக்கன் ஸில்க் பாரசூட்** முழுத் துண்டுகள் 12 (காலிஸ் ஜாயிண்ட் இன்றி ஸில்க் ஸேல் உடன் முழு பாரசூட்டும் ரூ. 12 விதம் கிடைக்கும். பாக்கிங் இலவசம். தபாற் செலவு ரூ. 1-11-0 தனி. மூன்று முழு பாரசூட்டுகளின் அதாவது 36 (காலிஸ்) பீஸ்களின்) குறைக்கப்பட்ட விலை ரூ. 33. தபாற் செலவு ரூ. 3-15-0. முன்பெல்லாம் இதன் விலை ரொம்பவும் அதிகம். ஆனால் தற்போது ஸ்டாக்குகளைத் தீர்ப்பதற்காக மொத்த விலைப்படியே கொடுக்கத் தீர்மானித்துள்ளோம். தபாற் செலவு உள்பட மூன்று பாரசூட்டுகள் உங்கள் வீட்டில் வந்து சேர ரூ. 36-15-0 மட்டுமே செலவழிக்கிறீர்கள். குறைந்த அளவே ஸ்டாக் இருப்பதால் இன்றே ஆர்டர் செய்து பயனடையுங்கள். தாமதித்தால் ஸ்டாக் தீர்ந்து ஏமாற்றமடைய நேரிடும். அமெரிக்காவிலிருந்து இனி சப்ளை எதிர்பார்க்கப்படவில்லை.

**AMERICAN TRADING COMPANY REGD. (K. W. M.)**

**FAMOUS DEALERS OF SILK CLOTH — JULLUNDUR CITY**

---

## இருமல், அவஸ்தை யளிக்கும் ஆஸ்துமா, மார்ச்சளி 3 நிமிஷங்களில் ஒழிக்கப்படுகின்றன

ஆஸ்துமா, மார்ச்சளி தாக்குதலால் மூச்சுத் திணறி தூக்கமின்றி அவதியுறுகிறீர்களா? அதிகமாக இருமுவதால் பிராணாவஸ்தையாக இருக்கிறதா? பலஹீன உணர்ச்சியினால் வேலை செய்ய அசக்தராகவும், ருசியுள்ள சில வஸ்துக்களையும் உணவுகளையும் சாப்பிட முடியவில்லையா?

எவ்வளவு நாட்களாக உபாதையுற்று எதை உபயோகித்திருப்பினும் சரி, மெண்டாகோ (Mendaco) ஓர் புதிய நம்பிக்கை அளிக்கும். மயக்க மருந்துகளில்லை. புகை பிடிப்பதில்லை. இஞ்சக்ஷனில்லை. ஆட்டோமைஸர் தேவையில்லை. செய்ய வேண்டியதெல்லாம் ருசியற்ற இரண்டு பில்லைகளை சாப்பாட்டின்போது உட்கொள்ள வேண்டியதே. உபத்திரவங்கள் மாயமாக மறைந்து விடும். மூன்றே நிமிஷங்களில் மெண்டாகோ (Mendaco) இரத்தத்துடன் கலந்து வேலை செய்யத் தொடங்கி, கபத்தைக் கரைத்து சிரமமின்றி ஸ்வாசத்தை அபிவிருத்தி செய்து முதல் நாள் இரவே நல்ல நித்திரையை அளித்து விரைவில் பல வருஷங்கள் யௌவன உணர்ச்சியையும் பலத்தையும் பெறுவீர்கள்.

### 2 வருஷங்களாக ஆஸ்துமா இல்லை

மெண்டாகோ (Mendaco) அநேகமாக உடனே குணமளித்து ஸ்வாசத்தை இலகுவாக்குவது மட்டுமின்றி எதிர்கால தாக்குதல் ஏற்படாது செய்கிறது. உதாரணமாக ஜே. ரிச்சர்ட்ஸ், ஹாமில்டன், ஒன்ட், கானடா, இருமல் மூச்சுத் திணறலால் இரவு தூக்கமின்றி 40 பவுண்டு எடை குறைந்து, இறந்து விடுவார் என எதிர்பார்க்கப்பட்டது. மெண்டாகோ (Mendaco) ஆஸ்துமாவை முதல் நாளே நிறுத்தி விட்டது. இரண்டு வருஷங்களில் அவ்வுபாதையே மீண்டும் ஏற்படவில்லை.

### பணம் வாபஸ் உத்தரவாதம்

மெண்டாகோ (Mendaco) முதல் வேளை சாப்பிட்டதுமே நேரடியாக ரத்தத்துடன் கலந்து ஆஸ்துமாவை ஒழிக்கிறது. மெண்டாகோ (Mendaco) அதிசீக்கிரத்தில் வயதில் பல வருஷம் யௌவன உணர்ச்சி, பலம் இவற்றை அளிக்கிறது. வாபஸ் உத்தரவாதத்தின் கீழ் மெண்டாகோ (Mendaco) உபயோகித்துப் பார்த்து தீர்ப்பளியுங்கள். மெண்டாகோ (Mendaco) சாப்பிட்டபின் பூரண குணம் பெற்று திருப்தியளிக்காவிடில் வெறும் பெட்டியை அனுப்பினால் முழுத் தொகையும் வாபஸ் செய்யப்படும். இன்றே மருந்து வியாபாரியிடமிருந்து மெண்டாகோ (Mendaco) வாங்குங்கள். இன்றிரவு எப்படித் தூங்குகிறீர்கள், மறுநாள் காலை எவ்விதமான தெம்புணர்ச்சி ஏற்படுகிறதென்பதையும் பாருங்கள். உத்தரவாதம் உங்களுக்குப் பாதுகாப்பு அளிக்கிறது.

**Mendaco**

மெண்டாகோ

★ ஆஸ்துமா ★ மார்ச்சளி நோய் ★ ஹே ஜுரம் இவற்றை நிவர்த்திக்கிறது



**இந்த சவாரியின் அற்புதத்தை உணருங்கள்**

**லக்ஷக்கணக்கானவர்கள் இதை அனுபவிக்கின்றனர்!**

இந்த புதிய ஸூபர்—குஷன்—புதிய மாடல் கார்களில்—எந்த மாடல் காரின் உபயோகத்துக்கும் திருப்திகரமான முறையில் சேவை செய்கிறது.

பெரியது அல்லாமல் மிருதுவானது. அதிக காற்றை உட்கொள்ளும் சக்தி வாய்ந்தது—மேலும் 24 பவுண்டு காற்று அழுத்தத்திலேயே ஓடுவது.

ஸூபர் - குஷன் உங்கள் காரில் பொருத்தப்பட்டால் அதன் பலன்கள் :

- எவ்வித ரஸ்தாவிலும் மிருதுவான ஓட்டம்
- இறுகப் பிடிப்பு — மேலும் பத்திரம்
- உங்கள் வண்டியின் தேய்மானமும் குறைவு
- சப்தமும் பழுதுச் செலவும் மிகக் குறைவு
- அதிக மைலேஜுடன் சிக்கனமும் கூட
- வெடிப்புகளைத் தவிர்க்க அதிக எதிர்ப்பு

The new

*Super Cushion*

by **GOODYEAR**

உலக முழுவதும் சாமான்ய ஜனங்கள் வேறெந்த டயரையும்விட குட்இயர் டயர்களையே அதிகம் உபயோகிக்கின்றனர்.

Edited, Printed and Published by R. Krishnamurthy at the "Kalki" Press
*116-119*, Sladens Garden, Poonamallee High Road, Kilpauk, Madras

REGD. No. M. 4392

கரகரப்பான கைகளில் அழுக்குப் படிகின்றது...
எங்கு அழுக்கிருக்கிறதோ அங்கு கிருமிகளாலான
அபாயம் ஏற்படும்!




அடிக்கடி லைப்பாயினால் சுத்தம்
செய்துகொள்ளுங்கள்!

# லைப்பாய் சோப்

அழுக்கிலிருக்கும் கிருமிகளிலிருந்து உங்களைக் காப்பாற்றுகிறது